# பொருளடக்கம்

# மனத்தக்காளி ரசம் *II*

*BY*

*RRG*

*Jc. HGF.T. PANDIA RAJAN*

*President 2012-13*

*JCI SIVAKASI SUPER POWER*

*JFM. R.R.GANESAN*

*JCI Prime Trainer*

*Past Zone vice President*

*JCI India ZONE XVIII*

# ஆசிரியரிடமிருந்து.......

*இனிய ஜேலிக்களே ......*

*"HIA" - Humour Illustration Activity*

*இதுதான் வெற்றிகரமான பயிற்சிக்கு அடிப்படை எனது இளவல் சிவகாசி சூப்பர் பவர் பாண்டியராஜனுக்கு என்னால் ஆன ஒரு சிறு முயற்சி ..... இந்தாண்டு Trainers Update நடத்தும் "வெள்ளை மனசு" பாண்டியராஜன் மகுடத்தில் மேலும் ஒரு வைரக்கல் பதிக்க எனது சிறு தொகுப்பு ....*

*பயிற்சியாளர்கள் பயிற்சியில் பயன்படுத்த, பொருத்தமான , நான் படித்த, யோசித்த, கேட்ட, திரட்டிய கதைகளை "மனத்தக்காளி ரசம்" என்ற தலைப்பில் இரண்டாம் முறை முழுமையாக வெளியிட ....... உங்கள் முன் இந்த தொகுப்பு.*

பயன்படுத்தி பயன் பெறுங்கள். இக்கையேட்டினை இந்தாண்டு *Trainers update*ல் வெளியிட முடிவெடுத்து, வெளியிடும் *JCI* சிவகாசி சூப்பர்பவர் தலைவர், *JC. HGF. R.* பாண்டியராஜன் மற்றும் அவரது *Super power Team* அனைவருக்கும் நன்றிகள் பலப்பல.

நன்றிக்குரியவர்கள்

இந்த நூலின் பெயரை எனக்கு தந்த என் *"Mentor" JCI.Sen.S.* நாகலிங்கம், நிதர்சனா-குங்குமம் என்னை நல்ல பயிற்சியாளராக மாற்றிய, தொடர்ந்து மாற்றிவரும் சகபயி ற்சியாளரர்கள் / ஜேஸிக்கள் என் குழந்தைகள் என் இல்லத்தரசி மற்றும் நீங்கள் ...

வாழ்த்துக்களுடன்

*RRG*

# 1. ரசம் -1

நான் எதையும் மனசில் வச்சுக்கமாட்டேன் .... அப்பப்ப உடனே வெளியில் கொட்டி விடுவேன் என சிலர் பெருமைப்படலாம் ஆனால் அந்த உடனே என்ற வார்த்தை ஆபத்தானது, சங்கடத்தை விளைவிக்க கூடியது.

நாலுபேர் கூடிய இடத்தில் ஒருவர்தன் நண்பரை பார்த்து மெதுவான குரலில் *"XYZ"* என்றார் மற்றவர் சட்டென எதிர்புறம் திரும்பி மின்னல் வேகத்தில் ஒரு செயலை செய்துவிட்டு மீண்டும் பழைய நிலைக்கு வந்தார். மற்ற யார் மனதிலும் இது பதியவில்லை. அதாவது *"XYZ"* என்பது *"Examine Your Zip"* என்பதன் சுருக்கம் நண்பர் செய்ய மறந்த செயலை மற்றவர் நினைவூட்டியிருக்கிறார். பிறர் அறியாமல் நாகரிகமான முறையில்.

இடக்கரடக்கல் ... அதாவது சபையில் பேசினால் அநாகரிமானது எனில் அப்படியே கூறாமல் உணர்த்துவது.

# 2. ரசம் -2

கடுமையான வெயில், களைத்துபோன ஒருவர் மாமரத்து நிழலில் ஒதுங்குகிறார் மாம்பழங்களை உண்டு பசியாறிய அவர் அந்த மாமரத்தில ஒரு அதிசயத்தைக் கண்டார். ஆம் மாமரத்தில் ஒரு ஆப்பிள் பழுத்துத் தொங்கியது. இது ஏதாவது மந்திரமோ? தந்திரமோ என மிரண்டார். ஆப்பில் பேசியது "பயப்படாதீர்கள்! நான் முதலில் மாம்பழமாகத்தான் இருந்தேன். நான் கனிந்து தயாரானபோது ஒரு வழிப்போக்கன் வந்தான். இது புளிக்குமோ? என சந்தேகப்பட்டான் அவனுக்கு வாழைப்பழம் சாப்பிட ஆசை , அதனால் நான் வாழைப்பழமாக மாறினேன். அதற்குள் அவன் போய்விட வந்த இன்னொருவன் கொய்யாப்பழம் சாப்பிட ஆசைப்பட்டான். அவனுக்காகவும் மாறினேன். நான் கனிவதற்குள்

அவனும் போய்விட்டான். பிறகு வந்தவன் கொய்யாபழம் நல்லதுதான் ஆனால் சிலசமயம் கசக்கும் என்றான். அவனுக்கு ஆரஞ்சு என்றால் கொள்ளை ஆசையாம் அதற்காகவும் மாறினேன். அவன் போய் அடுத்து வந்த சோம்பேறி யார் இதை உறித்து சாப்பிடுவது ? திராட்சைகள்தான் அப்படியே சாப்பிடலாம் என்றான். மீண்டும் திராட்சையாக மாறினேன். பருவங்கள் மாறி குளிர் அடித்தபோது வந்த ஒருவன் திராட்சை புளிக்கும் ஆப்பிள்தான் மருத்துவ குணங்கள் கொண்டது என்றான். அதனால் ஆப்பிளாக மாறினேன். அவனும் போய்விட்டான் இப்படி அடுத்தவர்களின் கருத்துக்காக அடிக்கடி மாறியதால் என் அடையாளமே எனக்கு மறந்துவிட்டது. என் இயல்பான மாம்பழமாகவே இருந்து ஒரு மாம்பழவிரும்பிக்காக காத்து கிடந்திருக்கலாமே என இப்போது வருந்துகிறேன்.

# 3. ரசம் - 3

கோதுமை வயலின் மத்தியில் கூடு கட்டிய ஒரு குருவி முட்டைகள் இட்டு அடைகாத்து குஞ்சு பொறித்து குஞ்சுகளைப் பொத்தி பொத்தி வளர்த்தது. குருவி தினமும் இரைதேட பகலில் சென்று வரும். குஞ்சுகள் வயலில் விளையாடிக்கொண்டிருக்கும்.

ஒரு நாள் குஞ்சுகள் விளையாடிக்கொண்டிருக்கும் போது வயலுக்கு சொந்தக்காரனான விவசாயியும் அவனது பிள்ளைகளும் வந்தார்கள். அறுவடைக்கு இதுதான் சரியான நேரம் நம் சொந்தகாரர்களையும் நண்பர்களையும் திரட்டி வந்து அறுவடை செய்துவிட வேண்டியதுதான் என்று தந்தை சொல்ல மகன்களும் தலையாட்டினர். இதனை கேட்ட குஞ்சுகள் பயந்து தாய்க்குருவி வந்தவுடன் விஷயத்தை ச் சொல்லி ஆபத்து உடனே கிளம்புவோம் என்றன.

தாய்க்குருவியோ பயப்படாதீர்கள் …… அக்கம் பக்கத்தினர் உதவியை அந்த விவசாயி நாடுவதாக இருந்தால் அறுவடை செய்ய இன்னும் சில நாட்கள் ஆகும் என்றது. அது சொன்னது போலவே அடுத்தநாளோ அதற்கு அடுத்தநாளோ அதற்கு அடுத்தநாளோ அறுவடைக்கு ஆட்கள் வரவில்லை. சிலநாட்கள் போனதும் விவசாயி மீண்டும் தன் மகன்களோடு வந்தான். காற்று அடிக்கத் துவங்கியதால் கதிர்களிலிருந்து கோதுமை மணிகள் விழுந்து வயல் வெளிமுழுவதும் சிதறியிருந்தன மகன்களிடம் இதைகாட்டி விவசாயி “இனிமேலும் தாமதித்தால் முதலுக்கே மோசமாகிவிடும் யாரையும் எதிர்பார்க்காமல் நாமே வந்து நாளைக்கே அறுவடை செய்துவிடலாம்” என்றான்.

தாய்க்குருவி வந்ததும் குஞ்சுகள் வந்ததும் குஞ்சுகள் இதைச் சொல்லின, “அப்படியானால் நாம்

*உடனே இங்கிருந்து கிளம்பிடவேண்டியதுதான்! எப்போது ஒருவன் யாரையும் சாராமல் தனது வேலையைத்தாமே செய்வது என முடிவுவெடுக்கிறானோ, அதன்பிறகு அதில் தாமதம் இருக்காது" என்றது தாய்க்குருவி.*

*அடுத்தவர்களை எப்போதும் சார்ந்திருக்கும் நபர்கள் நேரத்தையும் பலன்களையும் இழக்கிறார்கள்.*

# 4. ரசம் - 4

தோட்டக்கலைத்துறையில் *1000* மரக்கன்றுகள் நட மூவரை நியமித்திருந்தனர். முதல் நபர் மரக்கன்று நடகுழி தோண்டவேண்டும். இரண்டாம் நபர் குழியில் மரக்கன்றினை நட வேண்டும். மூன்றாமவரோ மரம் நட்ட குழியில் மண்ணைத்தள்ளி மூட வேண்டும்.

பணி துவங்கும் நாளன்று இரண்டாவது நபர் ஆப்செண்ட், முதல் நபர் பரபரவென குழி தோண்டிக் கொண்டே செல்கிறார். மூன்றாவது நபரோ தோண்டிய குழியை மூடிக்கொண்டே செல்கிறார். கேட்டதற்கு இருவரும் தத்தமது பணியை நிறைவாக செய்வதாக சொல்லிக்கொண்டனர். பயன் ஏதுமில்லை.

இலக்கில்லா பயணம் நம்மை எங்கும் கொண்டு சேர்க்காது.

# 5. ரசம் - 5

நீதிபோதனை வகுப்பு.

சொர்க்கத்துக்கு செல்லும் வழிகள் பற்றி பாடம் நடத்தினார் ஆசிரியர். தான் சொன்னதைக் குழந்தைகள் புரிந்து கொண்டார்களா என சந்தேகம் எழவே கேள்விகள் கேட்க ஆரம்பித்தார்.

"பசங்களா இப்போ என்னோட வீடு, கார் எல்லாத்தையும் வித்துடுறேன்! காசை கோவிலுக்கு கொடுத்துடறேன்! என்னால சொர்க்கத்துக்கு போகமுடியுமா? என்றார். முடியாதுசார்! என குழந்தைகள் கோரஸாக கத்தின, ஆசிரியர் குழம்பி நான் இந்த வேலையை விட்டுறேன், தினமும் கோவிலுக்குபோய் பெருக்கி, சுத்தம் பண்றேன், பக்தர்களுக்கு உதவி செய்றேன், இப்ப நான்

*சொர்க்கத்துக்கு போக முடியுமா? இப்போதும் குழந்தைகள் மறுக்க ஆசிரியர் கோபமாகி வேற என்ன செஞ்சா சொர்க்கத்துக்கு போகலாம் ? என கேட்டார்.*

*ஒரு குழந்தை நிதானமாக சொன்னது "அதுக்கு முதல்ல நீங்க செத்து போகணும்"*

*சிம்பிளாக புரியும் விஷயங்களை சிக்கலாக்காதீர்கள்.*

# 6. ரசம் - 6

ராணி மிகவும் நேசித்த முத்துமாலை தொலைந்து போனது. எங்கு தேடியும் கிடைக்காததால் ராணி சோகத்தில் ஆழ்ந்தாள். ராஜா முத்துமாலையை தேடித்தருபவர்களுக்கு ஒரு லட்சம் பொற்காசுகள் பரிசு என்றார். மூத்த அமைச்சர் ஒருவர் சாக்கடையில் அந்த அழகிய முத்துமாலை மின்னுவதை கண்டார், நாற்றமும் அழுக்குமாக இருக்கும் சாக்கடை என யோசிக்காமல் ஒரு லட்சம் பொற்காசை மனதில் கொண்டு சாக்கடையில் கைவிட்டார் கிடைக்கவில்லை, இறங்கி தேடினார் தட்டுப்படவில்லை, சகதியும் அழுக்குமானதுதான் மிச்சம், அந்த வழியே ஒரு துறவிவர, அமைச்சரிடம் என்னவென விசாரித்தார், அரைமனதோடு அமைச்சர் விபரத்தை கூற துறவி சாக்கடையின் கரையில் இருந்த மரத்தைக் காட்டிச்

சொன்னார் "மரக்கிளையில் இருக்கிறது மாலை, நீ எடுக்க நினைப்பது அதன் நிழலை".

*நிஜமான பிரச்சனைகளை மறந்துவிட்டு நிழலை துரத்துபவர்கள் ஜெயிப்பதில்லை.*

# 7. ரசம் - 7

வேகமாக காரில் போய்கொண்டிருந்த அந்த இளைஞனை மடக்கினார் டிராபிக் கான்ஸ்டபிள், பதற்றமாக இறங்கி வந்த இளைஞன் "நான் எதற்காக இவ்வளவு வேகமாக போகிறேன் என்றால்" என ஆரம்பிக்கும் போதே குறுக்கிட்டார் கான்ஸ்டபிள், நான் எதையும் கேட்கத் தயாராக இல்ல! இப்படித்தான் நிறைபேர் ஒவர்ஸ்டூடிலே போய் ஆக்ஸிடெண்ட் ஆகுது! எங்க சார்ஜெண்ட் ஐயா வருவாரு எதுவாயிருந்தாலும் அவரிடமே பேசிக்க என்று கார்சாவியை பிடுங்கிக்கொண்டார். சரி காரை நீங்க வச்சுக்கங்க நான் கிளம்பறேன் என்றவனை மடக்கி ஸ்டேஷனில் அமரவைத்தார்.

இரண்டு மணிரேமாகியும் சார்ஜெண்ட் வரவில்லை சோகமான இளைஞனிடம் கான்ஸ்டபிள்

*சொன்னார். "இன்னைக்கு எங்க சார்ஜெண்டு மகளுக்கு கல்யாணம் அவர் சந்தோஷமா வருவாரு அநேகமா உன்னை மன்னிச்சுவிட்டாலும் விட்டுவிடுவாரு!"*

*அந்த கல்யாணம் நடந்திருக்காது அவர் வரமாட்டார், மீறி வந்தாலும் கோபமாதான் இருப்பார் என்றான் இளைஞன், எப்படி சொல்றே..? நான்தான்யா கல்யாணமாப்பிள்ளை என்றான் இளைஞன் எரிச்சலோடு!*

*அடுத்தவர் சொல்தை கேட்டபிறகே தீர்ப்புச் சொல்லுங்கள்.*

# 8. ரசம் - 8

திறமையான ஆனால் ஞாபகமறதிப் பேராசிரியர் ஒருவர் ஜாலியாக இரயிலில் போய்க்கொண்டிருந்தார். ரயில் கிளப்பிய கொஞ்ச நேரத்தில் டிக்கட் பரிசோதகர் வந்தார். அவர் பேராசிரியரின் முன்னாள் மாணவர் "என்னை ஞாபகமிருக்கா சார்" என கேட்க பேராசிரியர் தெரியாமல் முழிக்கிறார்.

டிக்கட் பிளீஸ் என எல்லோரிடமும் பரிசோதித்த பரிசோதகர் பேராசிரியரிடமும் திரும்ப பேராசிரியர் துழாவிக் கொண்டிருந்தார் டிக்கட்டை நகர்ந்த பரிசோதகர் அரை மணி நேரம் கழித்து வந்த போதும் தேடிக்கொண்டிருந்தார் பேராசிரியர்.

நீங்க கண்டிப்பாக டிக்கட் வாங்கியிருப்பீங்க நம்புகிறேன் டென்ஷன் ஆகாதீங்க என்றார் பரிசோதகர்.

பேராசிரியர் நிதானமாக சொன்னார் “என்னை பற்றி தெரிஞ்ச பழைய மாவணவன் பரிசோதகரா வந்தது என் அதிர்ஷ்டம். ஆனால் நான் எப்படியும் டிக்கட்டை தேடி எடுத்தாகனும் ... இல்லைனா எங்கே இறங்கணுங்கிறதோ என்னால்தெரிஞ்சுக்க முடியாது”

*பிரச்சினையின் வேர் தெரியாதவரை தீர்வுகள் பலனளிக்காது.*

# 9. ரசம் - 9

“ஐயோ நீ சாகாமல் இருந்திருக்கக் கூடாதா? என்னை இப்படி தவிக்கவிடலாமா?” என்று ஒரு கல்லறைக்கு எதிரே ஒருவன் கதறிக்கொண்டிருந்தான். அவன் கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்து ஓடியது. அந்தபக்கமாய் போய்க்கொண்டிருந்த ஒருவன் இதைப் பார்த்தான். அழுதவனுக்கு எதிரே இருந்த கல்லறையில் ஒரு ஆணின் பெயர் பொறித்திருந்தது. “ஐயா, மனதை தேற்றிக்கொள்ளுங்கள். இந்த உலகில் பிறந்த எல்லோருமே ஒருநாள் இறக்க வேண்டியவர்கள்தான். அவர் உங்களுக்கு என்ன உறவு முறை? அவர் உங்கள் அண்ணனா? தம்பியா? இல்லை அப்பாவா?” என கேட்டான். அழுதவன் தன் கண்ணீரை துடைத்தபடி சொன்ன பதில் இது. “என் மனைவியின் முதல் கணவனின் கல்லறை!”

ஒவ்வொரு பிரச்சினைளையும் ஒவ்வொருவர் பார்ப்பதும் ஒரே கோணத்திலிருக்காது.

# 10. ரசம் - 10

ஆசிரியை ஒருவர் பாடம் நடத்திக்கொண்டிருந்தபோது வருடத்தின் நடுவில் புதிய மாணவர் ஒருவர் பள்ளியில் வந்து சேர்ந்தான்.

அந்த மாணவன் வந்த பிறகு அந்த வகுப்பே சற்று பிரகாசமாக ஜொலிக்க துவங்கியது. மறுவாரம் அந்த புதிய மாணவர் ஆசிரியையிடம் கூறினான், "நான் எனது பழைய ஆசிரியரிடமிருந்து ஒரு தகவல் கொண்டுவந்துள்ளேன், அது பேப்பரில் இல்லை எனது தலைக்குள் உள்ளது. இது என்னவென்றால் என்னை போல் ஒரு மாணவனை பெற நீங்கள் மிகவும் கொடுத்துவைத்தவர்கள்."

கற்பவரிடம் ஆனந்தத்தையும் அறிவையும் தூண்டுவதே உண்மையானக் கல்வி

# 11. ரசம் - 11

ஒரு பள்ளி மாணவன் தீ விபத்தில் மாட்டிக்கொண்டு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டான். அம்மாணவருக்கு தீவிர சிகிச்சை அளிக்கப்பட்டு வந்தது. அவனை பார்க்க செல்லும் எவரும் கிருமி தொற்றை தடுக்க பல முன் ஏற்பாடுகள் எடுத்து, கவசங்கள் அணிவித்து அனுப்பப்பட்டனர்.

அவனது பள்ளியில் இருந்த அவனுக்கு ஆங்கில இலக்கணம் கற்பிக்க ஒரு சிறப்பு ஆசிரியையை அனுப்பினர். மாணவனை தொடாமல் பேசச்சொல்லி முகமூடி அணிவித்து மருத்துவமனை நிர்வாகம் அந்த ஆசிரியையை அனுமதித்தது. அந்த மாணவனோ கடுமையான தீக்காயங்களுடன் போராடிக்கொண்டிருந்தான். அவனிடம் அந்த ஆசிரியை “உனது பள்ளியிலிருந்து உன்னை கவனிக்க

அனுப்பி வைக்கப்பட்ட சிறப்பு ஆசிரியை நான். உனக்கு ஆங்கில இலக்கணம் நான் கற்பிக்க வந்துள்ளேன்'' என்றார். அந்த ஆசிரியைக்கு அந்த வகுப்பு அவ்வளவு மனநிறைவு உள்ளதாக அமையவில்லை. அதிருப்தியுடனே சென்றார்.

மறுநாள் மீண்டும் அந்த ஆசிரியை மருத்துமனைக்கு வகுப்பிற்காக சென்றபோது அங்கிருந்த நர்ஸ் கேட்டார் அந்த மாணவனுக்கு என்ன செய்தீர்கள்? ஆசிரியை தயங்கி மன்னிப்பு கேட்கும் முன்னரே, நர்ஸ் தொடர்ந்தார் ''நேற்றுவரை நம்பிக்கை இல்லாமல் இருந்த எங்களுக்கு அவனிடம் ஏற்பட்ட மாற்றம் அற்புதமாக தெரிகிறது'' என்றார்.பிறகு அந்த மாணவன் சொன்னான் ''இறக்கப்போகிறேன் என அவநம்பிக்கையோடு இருந்த எனக்கு பாடம் போதிக்க சிறப்பு ஆசிரியை அனுப்பிய பள்ளியின் நம்பிக்கை எனக்கு வாழ வேண்டும் என்ற வெறியை

தூண்டிவிட்டது" என்றான்.

## நம்பிக்கையே சாதனையின் முதற்படி

# 12. ரசம் - 12

ஒரு சர்க்கஸ் குழுவிடம் சிக்கி கூண்டில் அடைபட்டுகுக்கிடந்த அந்த சிங்கத்துக்கு தினமும் ஒரு கிலோ கறி மட்டுமே சாப்பிடக் கொடுத்தார்கள். காட்டில் சுதந்திரமாக சுற்றித் திரிந்த மான்களை கணக்கில்லாமல் வேட்டையாடித் திரிந்த அந்த நாட்கள் திரும்ப வராதா என இறைவனை நினைத்து அது வேண்டியது.

ஒரு நாள் அமெரிக்காவில் இருந்து வந்த மிருகக்காட்சி சாலை உரிமையாளர் ஒருவர் அதை விலைக்கு வாங்கினார். சிங்கம் கப்பலில் அமெரிக்காவிற்கு பயணமானது. தனது பிரார்த்தனை பலித்துவிட்டதாக சந்தோஷப்பட்டது. தனகு ஏசி அறை கொடுத்து தினமும் ஒன்றிரண்டு ஆடுகளாவது சாப்பிட தருவார்கள் என் நாக்கை சப்புக்கொட்டிக்கொண்டது.

அமெரிக்காவில் இறங்கிய முதல் நாள் காலையில் அதற்கு அழகாக பேக் செய்யப்பட்ட ஒரு பார்சலில் டிபன் கொடுத்தார்கள். ஆசையாக அதை பிரித்த சிங்கம் உள்ளே சில வாழைப்பழங்கள் மட்டுமே இருப்பதை பார்த்து ஏமாந்து போனது, நாடுவிட்டு நாடு வந்ததால் கறிகொடுத்தால் வயிறு கெட்டுவிடும் என நினைத்து வாழைப்பழம் தருவதாக நினைத்தது.

ஆனால் அடுத்தநாளும் வாழைப்பழம் தான் கொடுத்தார்கள். பார்சல் கொடுத்தவரை கோபமாய் பார்த்து கேட்டது நான் யார் தெரியுமா ? காட்டுக்கே ராஜா எனக்கு வாழைப்பழம் தருகிறீர்கள் என்றது பார்சல் தந்தவன் பணிவாக சொன்னான் "ஐயா தாங்கள் சிங்கம் என்பது எனக்கு தெரியும் ஆனால் நீங்கள் இங்கு வந்தது ஒரு குரங்கின் விசாவில், அதனால் குரங்குக்கான உணவைத்தான் உங்களுக்குத் தரமுடியும்."

தெரியாத இடத்தில் குரங்குமாதிரி அவதிப்படுவதை

விட சொந்த மண்ணில் சிங்கமாக இருப்பது நல்லது.

# 13. ரசம் - 13

உருகி உருகி பல்லாண்டுகள் காதலித்த காதலர்கள் இரண்டு குடும்பத்தினரின் சம்மதத்துடன் திருமணம் செய்து கொண்டனர். திமணத்திற்கு பிறகும் அவர்களது பரஸ்பர அன்பு துளியும் குறையவில்லை. ஒரு நாள் கணவர் வீடு திரும்பும்போது மனைவி புது தகவல் ஒன்று சொன்னாள். ஒரு பத்திரிக்கையில் படிச்சேன் கணவன் மனைவிக்குள்ள ஒருத்தருக்கு பிடிக்காத விஷயங்களை இன்னொருத்தர் செய்தா அதை அலட்சியப்படுத்தக்கூடாது. ஒருத்தர் கிட்ட இன்னொருத்தருக்கு பிடிக்காத விஷயங்கள் ஒரு பேப்பர்ல இரண்டு பேரும் எழுதி வச்சிக்கிட்டு ஒன்னா உட்கார்ந்து பேசி அதை சரி பண்ணிக்கணுமாம், நாம நாளைக்கு இதை செய்து பார்க்கலாமா? என்றாள். கணவனும் சம்மதித்தான் மறுநாள் முழுக்க பேப்பரும்

பேனாவுமாக அழைத்தாள் மனைவி கணவனுக்கும் ஓர் பேப்பர் கொடுத்தாள். இரவு சாப்பிட்டு முடித்ததும் தன்கையில் இருந்த பேப்பரை எடுத்த மனைவி தூங்கி எழுந்ததில் இருந்து அநேகமாக அவன் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் குறை கண்டிருந்தாள். மூன்று பக்கத்திற்கு நீண்டது லிஸ்ட் படிக்க படிக்க கணவனின் கண்களில் இருந்து கண்ணீர், ஆறாக பெருகி ஓடியதை கவனித்தாள் அவள். ஆனாலும் முழுசாக முடித்துவிட்டு "உங்கள் லிஸ்ட்டை எடுங்க என்றாள்" அவளை ஆழமாக பார்த்த கணவன் கையில் இருந்த பேப்பரை கொடுத்தான் எதுவுமே எழுதாமல் வெறுமையாக இருந்தது. "நீ என்னவிதமான குறை நிறைகளோடு இருக்கிறாயோ அவற்றை சேர்த்து தான் உன்னை நேசிக்கிறேன்," உன் மீது நான் வைத்திருக்கும் எல்லையற்ற அன்பு உன் குறைகளை என் கண்களுக்கு தெரியாமல் மறைத்துவிட்டது. என்றான் அதை புரிந்து கொண்ட மனைவி அழத்துவங்கினாள்.

அன்பு செலுத்தினால் அடுத்தவரது குறைகள் நம் கண்களுக்கு தெரியாது.

# 14. ரசம் - 14

உங்கள் மனைவியின் சமையல் பிரமாதம், அசத்தீட்டாங்க என்று வீட்டிற்கு வந்த விருந்தினர்கள் பாராட்டுகிறார்கள். இதை கேட்டு உங்களது மனைவியின் முகம் மலர்கிறது. அப்போது உங்கள் மனதில் கீழே உள்ள மூன்று விஷயங்களில் ஏதோஒன்று தோன்றலாம்.

1. நீங்கள் டம்ளரில் வாங்கி ரசிச்சு குடிச்சிங்களே அந்த ரசம் உண்மையிலேயே நேற்று செய்தது, பிரிஜில் வச்சிருந்து எடுத்து இன்னிக்கு சுட சுட பரிமாறினார்கள் அவ்வளவுதான்.

2. எனக்கு ஒன்னும் சமையல்ல விஷேஷமா படலயே

3. இதென்ன பெரிய சமையல் எங்க அம்மா கைபக்குவத்தில் நூத்துல ஒரு பங்குதான் இது.

இவற்றில் எந்த ஒன்றையும் நீங்கள் மனம் விட்டு பேசினால் நல்லதுதானே என்று பேசிவைத்தால் அதன் விளைவுகள் என்னவாக இருக்கும் என்பது உங்களுக்கே தெரியும்.

பேசிய வார்த்தை உனக்கு எஜமான் பேசாத
வார்த்தைக்கு நீ எஜமான்

# 15. ரசம் - 15

அது ஒரு பிரபல மருத்துவமனை அதில் உள்ள பிரசவ பிரிவில் பல பெண்கள் அனுமதிக்கப்பட்டிருந்தார்கள், அவர்களின் உறவினர்கள் உட்கார நிறைய நாற்காலிகள் போடப்பட்டிருந்தன அவற்றில் பதற்றத்துடன் பல ஆண்கள் அமர்ந்திருந்தனர். அப்படி தவிப்புடன் அமர்ந்திருந்தவர்களில் ஒருவன் பிரசாத், மூடிய பிரசவ அறைக் கதவையும் தன் கைகடிகாரத்தையும் மாறி மாறி பார்த்துக் கொண்டிருந்தான், அறைக்கதவை திறந்து கொண்டு வெளியே வந்த ஒரு நர்ஸ் தனக்கு ஏதோ நல்ல செய்தி தரத்தான் வந்திருக்கிறார் அவர் என பிரசாத் நினைத்து இருக்க அந்த நர்ஸ் அவனை தாண்டி வேறு ஒருவரை நெருங்கினார், “வாழ்த்துக்கள் உங்களுக்கு பெண் குழந்தை பிறந்து இருகிறது” பிரசாத் மிகவும் கோபத்துடன் அந்த நர்ஸை பார்த்து சத்தமிட்டான்

“நீங்க செய்யரது அநியாயம் அவருக்கு முன்னாலே இருந்து நான் காத்துக்கிட்டு இருக்கேன் தெரியாதா” ஒரு நொடி திகைத்த நர்ஸ் விழுந்து விழுந்து சிரித்தாள் பிரசாத் பேசியதை கேட்டு அனைவருமே சிரித்தனர், அப்போதுதான் தனது பேச்சின் அபத்தம் பிரசாத்திற்கும் புரிந்தது.

துக்கமோ, சந்தோஷமோ எதுவா இருந்தாலும் ஒரு ஐந்து நிமிடம் தள்ளி வைத்து யோசித்துதான் செயல்படணும்.

# 16. ரசம் - 16

விடுமுறை நாளில் வீட்டில் ஒய்வாக அமர்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்தார் அவர். அவரது சுட்டிக் குழந்தை அடிக்கடி வந்து ஏதேதோசந்தேகம் கேட்டது. ஒவ்வொரு முறை பதில் சொல்லி அனுப்பினாலும், அடுத்த நான்கு வரி படிப்பதற்குள் புதிதாக இன்னொரு சந்தேகத்தோடு வந்து நின்றது.

குழந்தைக்கு பிஸியாக ஏதாவது வேலை கொடுக்காதவரை, அது தன்னை நிம்மதியாக படிக்கவிடாது என்பதை உணர்ந்த அவர், ஒரு பேப்பரில் அச்சிட்டிருந்த உலக வரைபடத்தை பல துண்டுகளாக வெட்டினார். அந்தத் துண்டுகளையும் பசை டியூபையும் குழந்தையிடம் கொடுத்த அப்பா, “உன்னோட அறிவுக்கு இது சவால். இந்தத் துண்டுகளை சரியா பொருத்தி, பழையபடி உலக வரைபடத்தை

உருவாக்கணும். நல்லா யோசிச்சு ஒவ்வொரு துண்டையும் சரிபார்த்து, கரெக்டான இடத்துல ஒட்டிக் கொண்டுவா!'' என்று சொல்லி அனுப்பினார். குழந்தை யோசித்தபடியே அவ ற்றை எடுத்துப் போக, அவருக்கு நிம்மதி! எப்படியும் அவற்றைப் பொருத்தி, முபமையாக உலக வரைபடத்தை உருவாக்க ஒரு நாள் ஆகிவிடும். இன்றைக்கு முழுக்க குழந்தையின் கேள்விக்கணைகளிலிருந்து தப்பித்து புத்தகத்தைப் படிக்கலாம் என நினைத்தார்.

ஆனால் அடுத்த ஐந்தாவது நிமிடமே வரை படத்தை ஒட்டி எடுத்துவந்தது குழந்தை. ஏதாவது தப்பு இருக்கிறதா என்று பார்த்தால், கச்சிதமாக இருந்தது அது! பிரமிப்போடு குழந்தையைப் பார்த்தார் அவர். ஏனெனில், அவரால் கூட இவ்வளவு வேகத்தில் துண்டுகளை ஒழுங்காக இணைத்திருக்க முடியாது.

''எப்படிச் செய்தே?'' என்று ஆச்சரியத்தோடு

குழந்தையைக் கேட்டார் அவர். வரைபடத்தை திருப்பிக் காட்டிய குழந்தை, "இந்த வரைபடத்துக்குப் பின்னால ஒருத்தரோட முகம் இருந்தது. அதை ஒழுங்கா வரவழைச்சா, பின்னாடி இருக்கற வரைபடமும் வந்துடும்னு தெரியும். அப்படித்தான் ஒட்டினேன்" என்று சொல்லிவிட்டு சமர்த்தாக வெளியில் விளையாடப் போய்விட்டது.

நாம் சிக்கலாக கருதும் பிரச்னைகளுக்கு,
மற்றவர்களிடம் சுலபமான தீர்வுகள் கிடைக்கலாம்.

# 17. ரசம் - 17

ஒரு மழைக்காலத்தின் இறுதியில் காட்டுக்குள் இருந்த அந்த ரோஜாச்செடியில் அழகான சிவப்பு ரோஜா ஒன்று பூத்தது. அதன் அழகு அருகிலிருந்த அனைத்து மரங்களையும் செடிகளையும் கவர்ந்தது. "உன்னைப்போல் கவர்ச்சியும்இனிமையும் எனக்கு இல்லையே!" என்று ஏக்கப் பெருமூச்சு விட்டது அருகிலிருந்த பைன்மரம். "கவலைப்படாதே எல்லோருக்கும் எல்லாமும் கிடைப்பதில்" என்று அதற்கு ஆறுதல் சொன்னது அருகிலிருந்த இன்னொரு மரம். இதர மரங்களும் செடிகளும் ரோஜாவின் அழகைப் பார்த்துவிட்ட பெருமூச்சுகள் காற்றில் கலந்தன. இதில் தலைக்கனம் ஏறிய ரோஜா, "இந்தக்காட்டில் யாரும் என்னைப்போல அழகு இல்லை" என்றது, அருகிலிருந்த சூரியகாந்தி "அப்படிச்

சொல்லாதே இந்தக் காட்டில் எல்லோருமே அழகு! நீயும் அதில் ஒன்று" என்றது. ரோஜா அதை காதில் வாங்கவில்லை. சுற்றுமுற்றும் பார்த்த அதன் கண்ணில் அருகிலிருந்த கள்ளிச்செடி பட்டது "இதைபார்.. உடம்பு முழுக்க முட்களோடு எவ்வளவு அவலட்சணமாக இருக்கிறது, இதையுமா அழகு என்கிறாய்?" என சூரியகாந்தியிடம் சீறியது. "உன்னிடம்கூடத்தான் முட்கள் இருக்கிறது. எது அழகு என்பதை யாரும் வரையறுக்க முடியாது" என்றது சூரியகாந்தி. "உனக்கு பொறாமை" என்ற ரோஜா, கள்ளிச்செடியை எவ்வளவு முடியுமோ அவ்வளவு ஏளனம் செய்தது. கள்ளி ச்செடி அதற்காகக் கவலைப்படவில்லை. "இறைவன் எந்த உயிரையுமே காரணமில்லாமால் படைக்கவில்லை" என்று மட்டும் சொன்னது.

மழைக்காலம் போய் கோடை வந்தது. மழை இன்றி, காட்டில் எல்லாச் செடிகளுமே தவித்தன

... ரோஜா உட்பட! ஒரு நாள் கள்ளிச்செடியை சிட்டுக்குருவிகள் கொத்திக் கொண்டிருப்பதை ரோஜா பார்த்தது. சூரியகாந்தியிடம் விசாரித்தது. “அதன் சதைப்பிடிப்பான கிளைகளில் தண்ணீர் சேமித்து வைக்கப்பட்டிருக்கும். அதை குடிக்கத்தான் குருவிகள் கொத்துகின்றன, இந்த சீசனில் குருவிகளுக்கு கள்ளிச்செடிகள் மட்டுமே அழகாகத் தெரியும்” என்றது. ரோஜாவுக்கு இப்போது புரிந்தது.

புறத்தோற்றத்தை வைத்து யாரையும்
எடைபோடக்கூடாது!

# 18. ரசம் - 18

காட்டுக்குள் பழ மரங்கள் சூழ்ந்த பிரதேசத்தில் வசித்தது ஒரு குரங்கு, பசித்தால் ஏதாவது மரத்தில் ஏறி பழங்களைச் சாப்பிடும் களைப்படைந்தால் நிழலில் தூங்கும்.

ஒருநாள் பக்கத்து கிராமத்துக்கு வந்தது. ஒரு வீட்டின் ஜன்னல் வழியாகப் பார்த்தது. உள்ளே ஒரு கிண்ணத்தில் அழகான பழங்கள் நிறைய அடுக்கிவைக்கப்பட்டிருந்ததைப் பார்த்தது. உள்ளே நுழைந்த அது, இரண்டு கைகளிலும் இரண்டு பழங்களை எடுத்துக்கொண்டு காட்டுக்குள் ஓடியது.

சிவந்த நிறம் கொண்ட ஆப்பிள் பழங்களை அது இதற்குமுன் பார்த்ததில்லை. முகர்ந்து பார்த்தது, எதுவும் வாசம் தெரியவில்லை. கடிக்க முயற்சித்தபோது பற்கள்

வலித்து, அப்போதுதான் குரங்குக்கு புரிந்தது. இவை பழங்கள் இல்லை. பழங்களைபோல செய்யப்பட்ட மர பொம்மைகள், அழகுக்காக வைத்திருந்தார்கள் போல்!

எப்படி இருந்தாலும், காட்டில் வேறு குரங்குகளுக்கு கிடைக்காத ஸ்பெஷல் பொருள் ஒன்று நம்மிடம் இருக்கிறது என பெருமிதப்பட்டது அது. எபோதும் அவற்றைப் பெருமையோடு தூக்கிக்கொண்டு திரிந்தது. அவை சூரிய வெளிச்சத்தில் மின்னுவதைப் பார்த்து ரசித்தது. இந்த விளையாட்டில் பசி கூட அதற்குப் பெரிதாகத் தெரியவில்லை.

ஒரு நாவல் மரத்தை நெருங்கியதும்தான் அது சுய நினைவுக்கு வந்தது. பசி வயி ற்றைக் கிள்ளியதை உணர்ந்த அது, மரத்தில் ஏறி பழங்களைப் பறிக்க நினைத்தது. ஆனால் இரண்டு கைகளிலும் இருந்த ஆப்பிலுகளை கீழே வைத்துவிட்டு மரம் ஏறவும் மனசில்லை. கைகளில் வைத்துக் கொண்டு ஏறவும்

முடியாது, வேறு வழியின்றி பசியைத் தள்ளிப்போட்டது. அப்போதுதான் இன்னொரு விஷயமும் ஞாபகத்துக்கு வந்தது ... ஆப்பிள்களை கையில் தூக்கியதிலிருந்து அது தூங்கவும் இல்லை. யாராவது ஆப்ளை லவட்டிக் கொண்டால் ?

இப்படியே இரண்டு நாட்கள் கடந்தன. பசியும் ஓய்வும் இல்லாதத்தால் தளர்ந்திருந்த குரங்குக்கு, இப்போது அந்த அரிதான ஆப்பிள்களே பெரும் சுமையாகத் தெரிந்தன. அவற்றை தூக்கிப்போட்டுவிட்டு மரம் ஏறி பசியாற முயன்ற போது அந்தக் குரங்கு சக்தியற்று மயங்கி விழுந்தது.

*மதிப்பில்லாத விஷயங்களை மனதில் சுமந்தால் நிம்மதி போய்விடும்.*

# 19. ரசம் - 19

ஆறு வயதாகும் ஒற்றை மகனை பெரும்பாலான நேரங்களில் வேலைக்காரியின் பொறுப்பில் விட்டு விட்டு வேலைக்குச் செல்லும் தம்பதி அவர்கள். எப்போதும் வேலையிலேயே மூழ்கியிருந்து குழந்தையை கவனிக்க மறக்கிறோமோ என்ற குற்ற உணர்ச்சி அவர்களை உறுத்திக் கொண்டே இருந்தது. ஒரு நாள் அந்த கணவருக்கு எதிர் பாராதவிதமாக லீவ் கிடைக்க அன்று குட்டிப்பையனைக் கூட்டிக்கொண்டு வெளியில் செல்லத் தீர்மானித்தார் அவர். நகர வாசமில்லத ஒரு குக்கிராமத்துக்குள் நுழைந்தது கார். பசுமையான வயல்வெளிகள் சூழ்ந்த பிரதேசம். பெயர் தெரியாத பறவைகளின் இனிமையான கூவல்கள் காற்றில் நிறைந்திருக்க ஒரு குளக்கரையில் போய் உட்கார்ந்தார்கள் அப்பாவும் மகனும்!

*“அப்பா, நாம ஏன் இங்க இருக்கோம்?” என்று கேட்டான் பையன்.*

*“நல்ல கேள்வி” என்று பரவசப்பட்ட அப்பா அவனுக்கு இயற்கையின் மகத்துவத்தை விளக்க முறப்பட்டார். “கான்க்ரீட்டும் கார்களுமா நிறைஞ்சிறுக்கற நகரத்தைவிட கிராமங்கள் அழகு ! சுத்தமான காற்று, பறவைகளோட இனிமையான சங்கீதம்,ஓடையில சலசலக்கிற தண்ணீர் பிரமாண்ட மரங்கள், பூத்துக் குலுங்கற செடிகள் இப்படிமனசை குதூகலமாக்கற இடம் இது. முன்னேற்றம்ங்கற பெயர்ல இயற்கை நிகழ்த்திய அற்புதங்களை கிராமத்துல பார்க்கலாம். தோல்வி, துக்கம், டென்ஷன்னு வாழ்க்கையில் பதற்றமடையற சமயங்கள்ல இங்க வந்தா போதும்... மனசு லேசாகிடும்! உன் கேள்விக்கு இந்த பதில் பொருத்தமா இருக்கா...?*

*நான் கேட்டது அது இல்லைப்பா!”*

*வேற என்ன...? அப்பா குழம்பினார்*

*"இன்னைக்கு மதியம் சீக்கிரம் வந்துடறேன்; கோயிலுக்குப் போலாம்னு அம்மா நேத்தே சொன்னாங்க. நாம சாயந்திரம் வரைக்கும் இங்கேயே இருக்கமே... அதைக் கேட்டேன்!"*

*குழந்தையின் நினைப்பில் மனைவியை மறந்தது அபோதுதான் அவருக்கு உறைத்தது.*

*பொருத்தமில்லாத பதில்கள் நன்றாக இருந்தாலும் ரசிக்கப்படுவதில்லை.*

# 20. ரசம் - 20

லேசான தளர்ச்சியோடு நடந்துவந்த அந்த முதியவருக்கு வயது என்பதைத் தாண்டி இருக்கும். டாக்டரை பார்க்க வந்திருந்தார். விரலில் அடிபட்டு தையல் போட்டிருந்தது. அதை பிரிக்க இன்று வரச்சொல்லியிருந்தார் டாக்டர். அவரை உட்காரச் சொன்ன நர்ஸ் “டாக்டர் கொஞ்ச நேரத்துல வந்துடுவார் வெயிட் பண்ணுங்க!” என்றாள். நேரம் ஆக ஆக அவர் தன் வாட்சைப் பார்த்தபடி பொறுமையிழந்து புலம்பிக்கொண்டிருந்தார். “என்னை ஒன்பது மணிக்கு வரச் சொல்லிவிட்டு, ஒன்பதரை ஆகியும் டாக்டர் வரலேன்ன என்ன அர்த்தம் என்று குரலை உயர்த்திக் கேட்டார். நர்ஸ் இந்த கேள்வியை எதிர்பார்க்கவில்லை. ’என்னவோ ஆபீசுக்கு போகிற அவசரத்தில் இருக்கிற மாதிரி கேட்கிறாரே... வீட்டில்

வெட்டியாக பொழுதை கழிக்கும் ஆசாமி, இங்கே கொஞ்ச நேரம் காத்திருப்பதில் என்ன தப்பு ? என நினைத்தாள். ஏன் அவசரப்படறீங்க அப்படி என்ன முக்கியமான வேலை உங்களுக்கு இருக்கு?'' என்று கேட்கவும் செய்தாள். ''என் மனைவி உடம்புக்கு முடியாம ஆஸ்பத்திரியில இருக்கா. நான் அவளோட போய் டிபன் சாப்பிடனும்'' என்றார் முதியவர்.

அவங்களுக்கு என்ன பிரச்சனை இருக்கு. ஞாபகமறதி. அஞ்சு வருஷமா எல்லாத்தையும் மறந்துட்டா. நான் போகலைன்னா டிபன் சாப்பிடறதையும் மறந்துடுவா!''

''எல்லாத்தையும் மறந்துட்டாங்கன்னா.. உங்களையுமா?

''ஆமா ... அஞ்சு வருஷமா தினமும் என்னை பார்த்து 'நீங்கயாருன்னு கேட்கறா! நான் அவளோட

*புருஷன்கறதே அவளுக்கு மறந்துடுச்சு!"*

*"உங்களைத்தான் அவங்களுக்கு அடையாளம் தெரியலையே அப்புறம் ஏன் தினம் போறீங்க?" என்று புரியாமல் கேட்டாள் நர்ஸ்.*

*முதியவர் அமைதியாகச் சொன்னார் .... "நான்தான் அவளோட புருஷங்கறது அவளுக்கு மறந்தபோயிருக்காலாம். ஆனா அவதான் என் மனைவிங்கறதை நான் எப்படி மறக்க முடியும்?"*

*உண்மையான அன்பை எதுவுமே தடுப்பதில்லை.!*

# 21. ரசம் - 21

விடுமுறையை வித்தியாசமாக, உற்சாகமாகக் கழிக்க விரும்புகிறவர்களுக்கான சொகுசுக் கப்பல் அது. இந்த சனிக்கிழமை காலை கப்பலில் ஏறினால், பல நகரங்களுக்கு கூட்டிச் சென்று, அடுத்த ஞாயிற்றுக்கிழமை மாலை திரும்பவும் கொண்டு வந்து விடுவார்கள். ஒன்பது நாட்கள் எங்கள் கப்பலில் பயணம் செய்யுங்கள். புதிய இடங்களை தரிசித்தபடி எங்களின் அறுசுவை உணவையும் ருசியுங்கள். இந்தஇரட்டை உற்சாகத்தில் இறங்கும்போது இரண்டு கிலோ எடை கூடிவிடுவீர்கள் என்பதே அந்த சொகுசுக் கப்பல் நிர்வாகத்தின் பெருமைக்குரிய அறிவிப்பாக இருந்தது.

இந்தமுறை பயணத்தில் ஒரு டாக்டர் தம்பதி வந்தனர். உடல்நலத்தில் அதிக அக்கறை கொண்டவர்

*கணவர். இட்லி, தோசை என கணக்கு பார்க்காமல் கலோரிகளில் எண்ணி எண்ணிப் பார்த்து சாப்பிடுகிறவர். கப்பலில் ஏறிய முதல் நாளே மெயின் ஹாலில் இருந்த எடை மெஷினில் தனது எடையை பரிசோதித்தார். 68 கிலோ இருந்தது. வாரம் இரண்டு முறையாவது தனது கிளினிக்கில் எடையை செக் செய்து கொள்பவர் அவர். முந்தின நாள் இப்படி பார்த்தபோது 70 கிலோ இருந்தார்.*

*இந்த எடை மெஷின் தப்பாகக் காட்டுகிறது என்பது புரிந்த ரூம் சர்வீஸுக்கு போன் செய்து சொன்னதும் யாரோ வந்து அதெல்லாம் சரியாத்தானே இருக்கும் எதுக்கும் செக் பண்றேன் என பரிசோதித்தார்கள். அடுத்த நாள் அது இயங்கவில்லை.*

*கப்பலிலிருந்து இறங்க வேண்டிய கடைசி நாளில் அந்த எடை மெஷின் திரும்பவும் இயங்கியது. டாக்டர் இப்போது ஏறி நின்று பார்த்தார். 70 கிலோ இருந்தார். மெஷினை இப்போது சரி செய்திருந்தார்கள். கப்பலுக்கு*

*வரும் சுற்றுலாப் பயணிகள் 2 கிலோ எடை ஏறும் ரகசியம் இப்போது அவருக்கு புரிந்தது.*

*கவர்ச்சி வார்த்தைகளின் பின்னால் ஏமாற்று செயல்கள் ஒளிந்திருக்கக்கூடும்!*

# 22. ரசம் - 22

*புறநகர்ப்பகுதியில் வாடகைக்கு குடிவந்தான் அவன். மாலையில் பொருட்களை லாரியில் கொண்டுவந்து இறக்கி வீட்டில் எடுத்துவைக்கும்பரை கூடவே இருந்தார், அவனுக்கு வீடுபார்த்துக் கொடுத்த தரகர். அவர் கிளம்பிய கொஞ்ச நேரத்தில் வந்தார் வீட்டு உரிமையாளர். மின் கட்டணம், குடிநீர், வீட்டு பராமரிப்பு என பல விஷயங்களில் அவரது நிபந்தனைகளை சொல்லிவிட்டு, கடைசியாக ஒரு எச்சரிக்கையும் கொடுத்துவிட்டுப் போனார். "இங்க கொஞ்சம் திருட்டு பயம் உண்டு, எதுக்கும் உஷாரா இருந்துக்கோங்க!"*

*அவனுக்கு அதிர்ச்சி. இதுபற்றி தரகர் எதுவுமே சொல்லியிருக்கவில்லை 'முன்பே தெரிந்திருந்தால், கொஞ்சம் உஷாராக இருந்திருக்கலாமே! என*

நினைத்தான். மனைவியிடமும் பிள்ளைகளிடமும் விஷயத்தைச் சொல்லிவிட்டு “நாளைக்கு புதுசா பூட்டு, சங்கிலின்னு வாங்கி எல்லா கதவுகளையும் பாதுகாப்பா பூட்டிடலாம். இன்னைக்கு ராத்திரி எப்படியாவது சமாளிக்கணும் என்றான். பிள்ளைகள் உடனே உதவிக்கு வந்தார்கள். தோட்டத்துக் கதவை உட்புறமாக தாழிட்டு, கதவை அணைத்தபடி உட்புறமாக காலி பாத்திரங்களை வைத்தார்கள். ஒருவேளை திருடன் கதவைத் திறந்தால், பாத்திரங்கள் சிதறி பெரும் சத்தம் எழுப்பும். அவனும் திடுக்கிட்டு ஓடுவான், இவர்களும் உஷாராகலாம்.தெருக் கதவில் ஆட்டோமேடிக் லாக் இருந்தது. அழுத்தினாலே பூட்டிக்கொள்ளும். அதையும் பூட்டி, இப்படி ஏற்பாடுகள் செய்தார்கள். ஆனாலும் நிம்மதியாகத் தூங்க முடியவில்லை. நடுராத்திரி ஒரு மணிக்கு யாரோ காலிங் பெல் அடிக்கும் சத்தம் கேட்டது. எல்லோரும் நடுங்கிவிட்டார்கள். கதவை திறக்கவும் பயமாக இருந்தது. மனைவியையும்

பிள்ளைகளையும் உள் அறைக்குள் ஒளிந்து கொள்ளச் சொல்லிவிட்டு கதவருகே சென்று அவன்,"யாரது?" என்றான் அதட்டலாக.

"நான் பக்கத்து வீட்டுக்காரருங்க. இப்பதான் ஷிப்ட் முடிஞ்சு வீட்டுக்கு வர்றேன். தெருக் கதவுலேயே சாவியை மறந்து வச்சிட்டு உள்ளே இருக்கீங்க. அதை எடுத்துக்கோங்க இங்க திருட்டுபயம் அதிகம் என்றது குரல்.

அதிக முன்னெச்சரிக்கை காட்டுபவர்கள்
அடிப்படையான விஷங்களில் கோட்டை
விடுகிறார்கள்.

# 23. ரசம் - 23

காதலித்து திருமணம் செய்து கொண்டவர்கள் அவர்கள். இத்தனை மாதங்களில் சின்னதாக உரசல் கூட வந்ததில்லை. ஒரு சர்வதேசக் கம்பெனியின் இந்தியக் கிளையை நிர்வகிக்கும் பிஸியான ஆள் அவன். அலுவலக நேரம் தாண்டியும் உழைக்க வேண்டிய கட்டாயம். திருமணத்துக்குப் பிறகு வேலையை துறந்த மனைவிக்கு தனிமை வேதனை தந்தது.

இதனால் ஒரு உணவு நேரத்தில் எழுந்த சின்ன விவாதம், பெரிய சண்டையாகவே மாறிவிட்டது. அதன்பின் இருவரும் பேசிக்கொள்ளவில்லை. ஒரு வாரம் ஓடியது. இன்று அவளுக்கு பிறந்தநாள். வாழ்த்து சொல்லி சமாதானக்கொடி நீட்டுவான் என எதிர்பார்த்தாள். அதிகாலையிலேயே குளித்துத் தயாரானாள். ஆனால் ஈகோ அவளைத் தடுத்தது.

’சண்டையை ஆரம்பித்தது அவன்தான்... அவனே முதலில் பேசட்டும் என நினைத்தாள்.

அவன் எதுவும் பேசாமல் கிளம்பிப்போய்விட்டான். போகிறவழியில் ஒரு கடையில் காஸ்ட்லி பொக்கே ஆர்டர் செய்தான். வீட்டு முகவரியைக் கொடுத்து டெலிவரி செய்யச் சொன்னான். மனைவிக்கு வாழ்த்து சொல்லவிடாமல் அவனது ஈகோ தடுத்தது. பொக்கேவை பார்த்துவிட்டு அவளாகப் பேசட்டும் என எதிர்பார்த்தான். ஆபீஸ் போனதும் முக்கியமான மீட்டிங். செல்போன் சிணுங்கியது. அழைத்தது மனைவி. எடுக்காமல் விட்டால் தப்பாகிவிடும் என எடுத்தான். “நமக்குள்ள என்ன இருக்கு” என்றாள் அவள் கோபமாக. அமைதியான அறையில் உரையாடல் எல்லோருக்கும் கேட்கும் சாத்தியம் இருப்பதை உணர்ந்தவன் “வீட்டுக்கு தகவல் வரும்” என்று சொல்லி போனை

வைத்தான்.அடுத்து பொக்கே கடையிலிருந்து அழைப்பு பொக்கேவுல ஒரு மெசேஜ் அட்டை வைக்கிறோம் சார் அதில் என்ன எழுதட்டும் என்று கேட்டார்கள். மீட்டிங் பாதிக்கப்படுவதை உணர்ந்து கடுப்பாகி, "ஒண்ணுமில்லை" என்று சொல்லிவிட்டு கட் செய்தான். பொக்கே கடையில் பொறுப்பாக 'ஒண்ணுமில்லை' என்று எழுதி எடுத்துப்போய் கொடுத்தனர். "நமக்குள்ள என்ன இருக்கு?" என்ற தனது கேள்விக்கு பதிலாக இதை உணர்ந்த மனைவி, கோபத்தில் வீட்டை விட்டே போய்விட்டாள்.

மனதில் இருப்பதை உடனே பேசிவிடுங்கள்.

# 24. ரசம் - 24

அந்த பிரபல ஹோட்டலுக்கு சாப்பிடப் போனவனை வெகுவாக ஈர்த்தாள், அங்கு உணவு பரிமாறும் கூடத்தில் இருந்த பெண் ஒருத்தி டைனிங் ஹாலுக்கு ம ற்பார்வையாளர் போலிருக்கிறது. பணிவும் புன்சிரிப்புமாக ஒவ்வொரு டேபிளையும் அணுகி, அவர்கள் கேட்பதைக் கொண்டுவந்து தரும்படி வெயிட்டர்களுக்கு கட்டளையிட்டுக் கொண்டிருந்தாள். வானத்து மேகங்களுக்கு மத்தியில் உலவும் அப்சரஸ் ஒருத்தி, வழிதவறி ஹோட்டல் பணிக்கு வந்துவிட்டது போலவே தோன்றியது அவனுக்கு.

பார்த்த முதல் கணமே பிடித்துப்போக, அவளை அடிக்கடி பார்க்கத் தோன்றியது அவனுக்கு! இதற்காகவே அவளைக் கூப்பிட்டு, "சாம்பார் கொஞ்சம் வேணும்" என்றான். அடுத்த நிமிடமே கூப்பிட்டு,

*“சட்னி வேணும்” என்றான். “தண்ணீர் கொஞ்சம் சூடா கிடைக்குமா?” என்றான். “குஜராத்தி அயிட்டம் என்ன இருக்கு?” என்று சந்தேகம் கேட்டான். என்ன பேசுவது என்று தெரியாமல், திரும்பவும் “ஒரு கப் சாம்பார் கிடைக்குமா?” என்று முதலிலிருந்து ஆரம்பித்தான்.*

*இப்படியே சில நிமிடங்களில் இவன் டேபிளுக்கு ஏழெட்டு முறை நடந்து அலுத்துப்போன அவள், அதன் பிறகு இவனைத் தவிர்க்க ஆரம்பித்தாள். பக்கத்து டேபிள்களுக்கு வந்தாலும், இவன் தன்னையே பார்ப்பதை உணர்ந்தாலும், இவனைப் பார்ப்பதைத் தவிர்த்தாள். ’எக்ஸ்கியூஸ் மீ என சன்னமான குரலில் இவன் அழைத்தது காதில் விழாதது போலவே இருந்தாள்.*

*இவன் சாப்பிட்டு முடித்து பில் கொடுத்து வெளியேறும் நேரத்தில் பார்த்தால், அவள் உள் அறைகுப் போய்க் கொண்டிருந்தாள். பின் தொடர்ந்து*

போனவன், “உங்ககிட்ட கொஞ்சம் பேசணும்!” என்றான்.

‘என்ன’ என்பது போல் அவள் பார்வையால் கேட்க, “உங்களை எனக்கு ரொம்ப பிடிச்சிருக்கு. அதைச் சொல்லத்தான் கூப்பிட்டேன். நீங்க திரும்பியே பார்க்கலை!” என்றான்.அவள் சிரித்தபடி, “இதுக்குத்தான் கூப்பிட்டீங்களா? இன்னொரு கப் சட்னி வேணும்’னு கேப்பீங்களோன்னுதான் நான் உங்கபக்கம் திரும்பியே பார்க்கலை” என்றாள்.

சொல்ல நினைப்பதை விட்டுவிட்டு வேறு
விஷயங்களைப் பேசாதீர்கள்!

# 25. ரசம் - 25

“காதலித்துத் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டேன். ஆனால், என்னால் எந்தப் பெண்ணையும் காதலிக்க முடியவில்லை. குழப்பமாக இருக்கிறது” என்றபடி அந்த குருவிடம் போய் நின்றான் ஒரு இளைஞன். நல்ல வேலையில் இருக்கிறான்; வசதியானவன்; கம்பீரமாகவும் இருந்தான் குரு அவனைப் பார்த்துச் சிரித்தார். பக்கத்திலிருந்த சோளத் தோட்டத்தைக் காட்டினார். “அங்கு போ! இருப்பதிலேயே பெரிதான சோளக்கதிரைப் பறித்துவா. ஒரே நிபந்தனை... போன பாதையில் திரும்பி வந்து, ஏற்கனவே பார்த்தைப் பறிக்கக்கூடாது!” இளைஞன் போனான். முதல் வரிசையிலேயே ஒரு பெரிய சோளக்கதிர் இருந்தது. கொஞ்ச தூரத்தில் மிகப்பெரிய சோளக்கதிர் அவனை சுண்டி இழுத்தது. அதையும்

அலட்சியம் செய்துவிட்டு நடந்தான். நடக்க நடக்க அவனுக்கு ஒரு உண்மை புரிய ஆரம்பித்தது... தோட்டத்தின் இந்தப் பக்கத்தில் இருக்க கதிர்கள் எல்லாமே சிறிதாக இருந்தன. பெரிய கதிர்களை அவன் இழந்துவிட்டான். எனவே, வெறுங்கையோடு தலையைத் தொங்கப்போட்டுக்கொண்டு வந்து குரு முன்பாக நின்றான்.

குரு சிரித்தார். ''இன்றைய இளைஞர்களின் பிரச்சனையே இதுதான்! 'இதைவிட சிறந்தது வேண்டும்' என நினைத்து, கிடைக்கும் ஒவ்வொரு துணையையும் புறக்கணிக்கிறார்கள். அந்தத் தேடல் வெறுமையில் முடியும்போதுதான் அவர்களுக்குப் புரிகிறது... 'கிடைத்த நல்ல துணையை இழந்துவிட்டோம்' என்பது! வாழ்க்கையில் ரிவர்ஸ் கியர் போட்டு அதை அடைய முடிவதில்லை...''

''அப்போ என் கல்யாணமும் இப்படிதான்

ஆகுமா?"

"இல்லை" என்று அந்த இளைஞனின் தோள்களை ஆதரவாகப் பிடித்தபடி குரு சொன்னார்... "இப்போது உன்னைத் திரும்பவும் அந்தத் தோட்டத்துக்கு அனுப்பினால் உஷாராகிவிடுவாய். கையில் கிடைத்த ஏதோ ஒரு கதிரைப் பறித்து, 'இதுதான் பெரியது' என்று திருப்தியடைந்து விடுவாய். அதுதான் பெரியது என்று நம்புகிறாயே, அந்த நம்பிக்கை உனக்கு கைகொடுக்கும்.

*நம்பிக்கைகள்தான் உறவுகளை உறுதியாக்குகின்றன!*

# 26. ரசம் - 26

எல்லா பெண்களையும் போல இல்லாமல் அவள் வித்தியாசமானவளாக இருந்தாள். ஏழ்மையிலிருந்து தன் குடும்பத்தைக் காப்பாற்ற இளம் வயதிலேயே முடிவெடுத்தாள். ஆனால் சோதனையாக அவளால் படிப்பில் ஆர்வம் காட்ட முடியவில்லை. நமக்கு என்ன வாய்த்திருகிறதோ, அதில் சாதிப்போம் என முடிவெடுத்தவள், டிரைவிங் கற்றுக் கொண்டாள். ரயிலைத் தவிர எல்லா வகனங்களையும் அநாயாசமாக ஒட்டக்கூடிய திறமைசாலி ஆனாள். லைசென்ஸும் வாங்கி னாள். ஆனால் ஒரு ஆட்டோவோ, டாக்சியோ இவளை நம்பித் தர யாரும் தயாராக இல்லை. முதலீடு போட்டு வாங்கவும் பணமில்லை.

வாய்ப்புக் கேட்டு போன இடத்தில் ஒருவர், “லாரி ஓட்டறியா” என்று கிண்டலாகக் கேட்டார். இவளும்

சம்மதிக்க, அந்த அசாத்திய துணிச்சலுக்கே வாய்ப்பு தந்து ஒரு புத்தம்புது லாரியை கொடுத்தார். வருமானம் அதிகம்தான், ஆனால் இரவு பகலாக கண்விழித்து ஆளரவமற்ற நெடுஞ்சாலைகளில் ஓட்ட வேண்டும். தன் பாதுகாப்புக்காக ஒரு நாயைத் துணைக்குக் கூட்டிப்போக முடிவெடுத்தாள். ஆக்ரோஷமான ஒரு நாய் அருகில் இருந்தால், ஆண்கள் தவறான என்னத்தோடு நெருங்க மாட்டார்கள். நாய் விற்பனை செய்யும் ஒருவரிடம் போய் சொன்னாள், “இந்த நாய்க்கு ஆண்களைக் கண்டாலே பிடிக்காது” என்று ஒரு நாயைக் கொடுத்தார். பார்த்தாலே பயமுறுத்தும் தோற்றம் கொண்ட அந்த நாய் ஒரே நாளில் அவளோடு பழகி, லாரியிலும் பயமில்லாமல் பயணித்தது.

நாய் இருக்கும் தைரியத்தில், முன்னிரவு நேரத்தில் சாலையோர ஓய்விடம் ஒன்றில் லாரியை நிறுத்தி சாப்பிட உட்கார்ந்தாள் அவள். பக்கத்து

லாரியிலிருந்து இரண்டு பேர் குடிபோதையில் அவளை நெருங்கினார்கள். நாய் அவர்களை பார்த்ததும் முகத்தைத் திருப்பிக் கொண்டு லாரிக்கு அடியில் போய் பதுங்கியது. "ஆண்களைக் கண்டாலே பிடிக்காது" என்பதன் அர்த்தம் இதுதான் என்பதை லேட்டாகப் புரிந்துகொண்ட அவள், தனக்குத் தெரிந்த கராத்தேவை உபயோகித்து தப்பித்தாள்.

எதையும் முழுமையாக விசாரிக்காமல் நம்பக்கூடாது.

# 27. ரசம் - 27

ரகுவும் முரளியும் பால்யகால சிநேகிதர்கள். கல்லூரிவரை ஒன்றாகப் படித்தவர்கள், வெவ்வேறு தருணங்களில் சென்னைக்குக் குடிபெயர நேர்ந்தது. ஒருவர் இருப்பது எங்கே என்று அடுத்தவருக்குத் தெரியாது. லட்சக்கணக்கில் மக்கள் வசிக்கும் ஒரு நகரத்தில் இரண்டுபேர் தற்செயலாக கூட சந்தித்துக் கொள்ளும் வாய்ப்பு நேர்வது அரிது.அப்படி அரிதாக ஒரு ஷாப்பிங் மாலில் இருவரும் நேருக்கு நேர் சந்திக்க நேர்ந்தது, புருவங்கள் உயர்த்தி கட்டிப்பிடித்து, உருகி உருகி பேசித் தீர்த்துவிட முடியுமா? முரளி தன்னுடைய வீட்டு அட்ரஸை ரகுவுக்குக் கொடுத்தபடி சொன்னான். டேய் ரகு வர்ற சண்டே என் வீட்டுக்கு வர்றே. எனக்கு மூணுபசங்க. ஞாயிற்றுக்கிழமை லீவ்ங்கறதால அவங்களும் வீட்லதான் இருப்பாங்க. மனைவியும்

*வீட்லதான் இருப்பா.''*

*சரி எப்படி வரணும்? வழியைச் சொல்லு...''*

*வழியைச் சொன்ன முரளி, ''அந்தத் தெருவுலயே பெரிய அபார்ட்மெண்ட் எங்களோடதுதான். வெளியே கார் பார்க் பண்ண நிறைய இடம் இருக்கு. காரை நிறுத்திட்டு வாசல்ல இருக்கற கேட்டை காலால் உதைச்சுத் திறந்துக்கிட்டு உள்ளே வா. லிஃப்ட் இருக்கு. அதுல ஏறி, உன் வலது தோள்பட்டையால ஆறாம் நம்பர் பட்டனை அழுத்து. அந்த ஆறாவது மாடியில லிஃப்ட்டை விட்டு இறங்கி வலது பக்கம் நடந்ததும், என் வீடு மூணாவதா இருக்கும். வாசல்ல என் பெயர்ப்பலகை இருக்கும். அங்கே வந்து காலிங் பெல்லை இடது தோள்பட்டையால் அழுத்து! என்றான்.*

*ரகுவுக்குக் குழப்பம் ... ''ஏன் காலால் உதை; தோள்பட்டையால் அழுத்துன்னு சொல்றே,*

அதையெல்லாம் கையாலயே செய்யலாமே! என்றான்.

அதுக்கில்லை ரகு ! இத்தனை வருஷம் கழிச்சு என் வீட்டுக்கு வர்றே. வெறுங்கையோடவா குழந்தைகளைப் பார்க்க வருவே? ரெண்டு கை நிறைய வாங்கிட்டு வருவே இல்லே... அதனாலேதான் சொன்னே."

புத்திசாலிகள் தங்கள் தேவைகளை குறிப்பால் உணர்த்திவிடுகிறார்கள்!

# 28. ரசம் - 28

தனது ராசி எண் ஐந்து என்பதில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந்த ஜோதிடப் பற்றாளர் அவர். ஐந்தாவது மாதம் - அதாவது மே மாதம் - ஐந்தாம் தேதிதான். அவருக்கு குழந்தைகளும் ஐந்து.

அவர் வேலையில் சேர்ந்ததும் ஒரு ஐந்தாம் தேதியில்தான்! முதல் மாத சம்பளம் மிகச்சரியாக ஐந்தாயிரம் ரூபாய். அதன்பிறகு அவரது உழைப்பைப்பார்த்து சம்பளம் எகிறத் தொடங்கியதும், அதில் மட்டும் நியூமராலஜி பார்ப்பதை விட்டுவிட்டார். வீட்டுக்கும் கதவு எண் ஐந்து வருகிறமாதிரி தேடிப் பிடித்து வாங்கினார். இப்படி எல்லாம் ஐந்து என்ற எண்ணைச் சுற்றிச் சுற்றி வருவதாலேயே தன் வாழ்க்கை வளமாக இருக்கிறது என்று தீர்மானமாக நம்பிக் கொண்டிருந்தவர், எந்த தவறான வழிக்கும்

*போனதில்லை. இப்போது அவருக்கு வயது 55. ஒரு நாள் தற்செயலாக ஒரு பழைய நண்பரை சந்தித்தார். அந்த நண்பர் தீவிர ரேஸ் பிரியர். பேச்சுவாக்கில் அவர் ஒரு சுவாரசிய தகவல் சொன்னார். ....... "நம்ம ஊர்ரேஸ்ல லக்கி 5ன்னு ஒரு குதிரை நாளைக்கு ஒடுது. ஏற்கனவே நாலு ரேஸ்ல ஓடினாலும் அது ெயிச்சதில்லை. ஆனா அது ஓடப்போற ஐந்தாவது ரேஸ்ல கண்டிப்பா ஜெயிக்கும்!"*

*கேட்டதும் இவருக்கு சபலம், "நம்ம ஐந்தாம் நம்பர் ராசி இதிலும் ஜெயிக்கும் என முடிவு செய்தவர், தன் சேமிப்பு ஐந்துலட்சம் ரூபாயை எடுத்துவந்து அந்தக் குதிரை மீது கட்டினார். முதல் முறையிலேயே இவ்வளவு பெரிய ரிஸ்ககை இவர் எடுப்பதைப் பார்த்து ரேஸ்பிரியரான நண்பரே திகைத்துவிட்டார். ரேஸ் ஆரம்பித்து. லக்கி 5 குதிரை பாய்ச்சல் காட்டி ஓடியது. ஆனாலும் பல குதிரைகள் அதனினும் வேகம் காட்டி*

ஓட ... ரேஸ் முடிவில் லக்கி 5 ஜெயிக்காமல் சரியாக ஐந்தாம் இடத்தையே பிடித்தது.

உழைப்பு மட்டுமே ஒருவரை உயர்த்தும் ஏணி.

# 29. ரசம் - 29

சூப்பர் மார்க்கெட்டில் ஷாப்பிங் செய்து கொண்டிருந்தான் அந்த டீன்ஏஜ் இளைஞன். இவன் எந்த வரிசையில் போய் பொருட்களைத் தேடி எடுத்தாலும், பின்னாலேயே ஒரு பெண்மணி வந்து கொண்டிருந்தாள். இவனை அடிக்கடி உற்றுப் பார்த்தபடி இருந்தாள்.

அந்த பெண்மணிக்கு சுமார் 35 வயது இருக்கலாம். ஆனால் வயது தெரியாத தோற்றத்தோடு அபார அழகாகத் தெரிந்தாள். இளைஞனும் அந்தப் பெண்மணியைப் பார்த்து சிரித்து வைத்தான். பதிலுக்கு அவளும் ஒரு புன்னகையை உதிர்க்க, இவனுக்குள் இனம்புரியாத சிலிர்ப்பு. தலைமுடியைக் கைகளால் கோதி விட்டுக்கொண்டான்; முகத்தை கர்ச்சீப் எடுத்து அழுத்தமாகத் துடைத்தான். ஷாப்பிங் முடிந்து பில்

போடும் நேரம். இவன் கியூவில் நிற்க, அவசரமாக இவனுக்கு முன்னாள் வந்து நின்றாள் அந்தப் பெண்மணி. இவனிடம் திரும்பினாள். “நான் அடிக்கடி உன்னைப் பாத்ததால், நீ என்னைத் தப்பா நினைச்சிருப்பே! என்னால முடியல. உன் வயசுல எனக்கு ஒரு பையன் இருந்தான். போன மாசம் திடீர்னு ஆக்சிடென்ட்ல இறந்துட்டான். அவன் பார்க்கறதுக்கு உன்னை மாதிரியே இருப்பான்” என்றபடி கலங்கிய கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

அந்த இளைஞனுக்குள் இதுவரை கிளர்ந்திருந்த அத்தனை உணர்வுகளும் வடிந்துவிட, “ஸாரிங்க... நான் கிளம்பும்போது குட் பை மம்மி !ன்னு மட்டும் சொன்னா போதும். உன் குரலும் கூட என் பையன் குரல் மாதிரியே இருக்கு. அவன் அப்படியே செய்தான். அந்தப் பெண்மணி கண்கணைத் துடைத்துக் கொண்டு நகர்ந்தாள். இவனுக்கு பில் போட்ட கிளார்க், ”ஐயாயிரம்

ரூபா கொடுங்க" என்றான். இளைஞனுக்கு பகீரென்றது. "நான் வாங்கியது நானூறு ரூபா கூட வராதே என்றான் கோபமாக."உங்க அம்மா பில்லுக்கும் சேர்த்து நீங்கதான் பணம் கொடுப்பீங்கன்னு சொல்லியிருக்காங்க என்றபோதுதான் விஷயம் உறைத்தது.

சென்டிமென்ட்டாக ஏமாற்றுகிறவர்களிடம்
எச்சரிக்கையாக இருங்கள்!

# 30. ரசம் - 30

பிரபல வழக்கறிஞரான அவர் இன்று மகிழ்ச்சியிலும் குழப்பத்திலும் மூழ்கியிருந்தார், மகிழ்ச்சிக்குக் காரணம் ஒரு வழக்கில் கிடைத்த வெற்றி. நகரின் மிகப்பெரிய பணக்காரரர் அவருக்கு நெருங்கிய நண்பர். செத்துப்போன அப்பா வாங்கி வைத்திருந்த சொத்துக்கள் எல்லாம் எங்கே இருக்கின்றன எனத் தேடுவதிலேயே அந்த் தொழிலதிபரின் காலம் கழிந்தது. அப்படி பல கோடி ரூபாய் மதிப்புள்ள இரு இடத்தை இவரது அப்பா வாங்கி வைத்திருந்தாலும், அது இன்னமும் வேறொருவர் ஆக்கிரமிப்பில் இருந்தது. அதை மீட்பதற்காக போட்ட வழக்கில் இன்றுதான் அந்தத் தொழிலதிபருக்கு சாதகமாக தீர்ப்பு வந்திருக்கிறது. குழப்பத்துக்குக் காரணமும் இழந்த வழக்குதான்! “சொத்துப்பிரச்சனைக்காக ஊர்

ஊரா அலைஞ்சுக்கிட்டு இருக்கேன். அதனால இந்த வழக்கை முழுசா நீங்கதான் பார்த்துக்கணும்'' என நண்பரான வழக்கறிஞருக்கு அவர் அன்புக் கட்டளை போட்டிருந்தார். அதனால் இதவரை ஃபீஸ் என்று பைசா கூட வாங்கவில்லை. தருவாரா, நட்புக்காக இலவச சேவை செய்ததாக நினைத்துக்கொள்வாரா என்று குழப்பம்.

வெற்றித் தகவல் சொன்னதும் இரவே வழக்கறிஞரைப் பார்க்க வந்த தொழிலதிபர், ஒரு அழகிய பொம்மையைக் கொடுத்தார். "இது லண்டன்ல வாங்கினது. பொம்மை மாதிரியும் குழந்தைங்க ரசிக்கலாம்; உண்டி மாதிரி இதுக்குள்ள பணத்தைப் போட்டும் வச்சுக்கலாம்'' என்றார் தொழிலதிபர்.

வழக்கறிஞருக்குக் கோபம். "என்னய்யா இது விளையாட்டு? உனக்காக நான் பல கோடி ரூபா சொத்தை வாதாடி மீட்டுத் தந்திருக்கேன். நீ என்னன்னா

ஒரு பொம்மையைத் தர்றே. வெளியாளா இருந்தா அஞ்சு லட்ச ரூபாய் ஃபீஸ் வாங்கியிருப்பேன் தெரியுமா?'' என்று கொதித்தார்.

தொழிலதிபரின் முகம் சுருங்கியது. அந்த உண்டி பொம்மையை வாங்கித் திறந்தார். "இதுக்குள்ள பத்து லட்சம் ரூபாய் வச்சிருந்தேன். திறந்து கூட பார்க்காம ஆத்திரப்படறீங்க. இப்போ அஞ்சு லட்சத்தை நான் எடுத்துக்கறேன். உங்க ஃபீஸ் அஞ்சு லட்சம் உள்ள இருக்கு'' என்று சொல்லி பொம்மையைக் கொடுத்துவிட்டு வெளியேறினார்.

*அவசரத்தில் பேசும் வார்த்தைகள்தான் நட்பை முறிக்கின்றன !*

# 31. ரசம் - 31

தொழிற்சாலையில் எல்லோருமே சூப்பர்வைசர் சுந்தரத்தை காணோம் என்று தேடினார்கள். காலை *10* மணிக்கு உள்ளே நுழைந்தால், பம்பரமாக எல்லா செக்‌ஷன்களிலும் சுற்றிக் கொண்டிருப்பார் சுந்தரம். கணீர் குரலில் கட்டளைகள் பறக்கும். அந்தக் குரல் கேட்டுக்கேட்டு எல்லோருக்கும் பழகிப் போய்விட்டது. இன்றைக்கும் அவர் வேளைக்கு வந்திருந்தார். ஆனால் ஒரு மணி நேரமாக ஆளைக் காணவில்லை. இப்படி வேலை நேரத்தில் எங்கும் போகிற வழக்கம் உள்ளவர் இல்லை அவர். அதனால்தான் எல்லோம் தேடினார்கள்.

கடைசியில் அவரது கணீர் குரல் டாய்லெட்டிலிருந்து கேட்பதாக ஒருவர் சொல்ல, பலரும் அங்கு ஓடினார்கள். டாய்லெட் கதவுத் தாழ்ப்பாள் பழுதாகி இருக்க, உள்ளே சிக்கிக்கொண்டு

அபயக்குரல் எழுப்பியபடி இருந்தார் சுந்தரம்.

மெயின்டனென்ஸ் பிரிவுக்கு தகவல் போக, அங்கிருந்து சாவகாசமாக வந்தான் ஒரு இளைஞன். எப்போதும் சிடுசிடுப்பாக இருக்கும் அவனை தொழிலாளர்கள் யாருக்குமே பிடிக்காது. இந்த தாழ்ப்பாள் பழுதை ஏற்கனவே பலமுறை சொல்லியும் அவன் சரி செய்யவே இல்லை. அதனால் தொழிலாளர்கள் அவனிடம் சண்டைபோட, "இப்ப என்ன ஆகிடுச்சு? உள்ள ஒருத்தர் மாட்டிக்கிட்டாரு.... செத்தா போயிட்டாரு?" என்றபடி தாழ்ப்பாளை ஏதோ செய்து திறந்தான்.

வியர்க்க விறுவிறுக்க வெளியில் வந்த சுந்தரம், "முதல்ல இதை சரி பண்ணிடுப்பா! நான் வேணா எங்க ஆளுங்க யாரையாவது உனக்கு உதவிக்கு இருக்க ச் சொல்றேன்" என்றார் அவனிடம்.

*“இது டெக்னிக்கல் வேலை. உங்க யாருக்கும் தெரியாது. நீங்க போங்க... நான் பார்த்துக்கறேன்!” என்றான் அவன் அலட்சியமாக.*

*கொஞ்ச நேரம் கழித்து டாய்லெட்டிலிருந்து அபயக்குரல். இதே அறையில் தாழ்ப்பாள் பிரச்சனை. “மெயின்டனென்ஸ்ல சொல்லி அந்த சிடுமூஞ்சிப் பையனை வர ச்சொல்றோம். கொஞ்சம் இருப்பா” என வெளியிருந்து ஒரு தொழிலாளி குரல் கொடுக்க, உள்ளிருந்து பரிதாபமாக வந்தது குரல். “ரிப்பேர் பண்ண வந்த நான்தான் சிக்கிட்டேன். காப்பாத்துங்க...”*

*தேடிவரும் உதவிகளை அலட்சியம் செய்யக்கூடாது!*

# 32. ரசம் - 32

அலுவலகத்துக்குப் பக்கத்தில் இருக்கும் ஹோட்டலில் சாப்பிட்டுவிட்டுத் திரும்பும்போது ஒரு சிறுவனின் குரல் இவனை இழுத்தது. ஒரு தட்டில் வைத்து வெற்றிலை பாக்கு, புகையிலை அயிட்டங்கள் விற்றுக் கொண்டிருந்தான். சார்! வெற்றிலைவாங்கிக்கோங்கோ, சாப்பிட்டதும் இதைப் போட்டா உடம்புக்கு நல்லது என்றான் சிறுவன்.

“எனக்குப் பழக்கம் இல்லையே .” என்றான் இவன். “ப்ளீஸ் சார் வாங்கிக்கோங்க எனக்கு அப்பா கிடையாது. அம்மாவுக்கும் உடம்பு முடியலை அவங்களுக்காகத்தான் நான் படிக்கக்கூடப் போகாம இப்படி வியாபாரம் செய்யறேன் என்று கெஞ்சினான் சிறுவன்.

இவனுக்கு அந்த சிறுவன் மேல் பரிதாபம் ஏற்பட்டது. பாக்கெட்டில் இருந்து ஐந்பது பைசாவை எடுத்துக் கொடுத்துவிட்டு, "உனக்காகத் தர்றேன், ஆனா எனக்கு வெற் றிலை வேண்டாம்" என்று சொல்லிவிட்டுத் திரும்பும்போது அந்தச் சிறுவனிடம் காசு கொடுப்பது வாடிக்கையாகிப்போனது. இவனும் எதுவும் பேசுவதில்லை. சிறுவனும் பேசுவதில்லை. வார்த்தைகளற்ற பரிமாற்றம்தான்! நாளடைவில் இப்படி நிறையபேர் சிறுவனுக்குக் காசு தருவதை பார்த்தவன் அந்த சிறுவனின் பேச்சு சாமர்த்தியத்தை மனசுக்குள் மெச்சிக் கொண்டான்.

மாதங்கள் உருண்டோடின, அழுக்குத்தலையும் கிழிந்த உடையுமான ஆரம்பத்தில் இருந்த சிறுவன் இப்போது புது உடைகள் அணிய ஆரம்பித்திருந்தான். உடலிலும் செழுமை ஏறியிருந்தது. தட்டுக்குப் பதிலாக ஒரு பெரிய பலகையே கடையாகி இருந்தது.

அன்றும் அப்படித்தான் ஐம்பது பைசா கொடுத்துவிட்டு நகர்ந்தவனை, "சார்" என்ற சிறுவனின் குரல் தடுத்து நிறுத்தியது. எப்போதும் பேசாதவன் ஏன் கூப்பிடுகிறான்? கேள்வியோடு சிறுவனின் முகத்தை பார்த்தான்.

வெற்றிலை பாக்கு எல்லாமே விலை ஏறிடுச்சு சார் இன்னும் பழைய ஞாபகத்துலயே ஐம்பது பைசா தர்றீங்க என்றான் சிறுவன்.

இவன் அதிர்ந்து நின்றான் இலவசமாக தரும் எதுவுமே சீக்கிரம் மதிப்பிழந்து விடும்

# 33. ரசம் - 33

வேலைபார்த்தபடி பகுதிநேர வகுப்பில் கல்லூரியில் படித்து பட்டம்பெறும் முய ற்சியில் இறங்கியிருந்தால் அந்த 20 வயது இளம் பெண். பலதரப்பட்டவர்களும் வந்து படித்தார்கள்.

சமீப நாட்களாக அவளுக்கு ஒரு சங்கடம் 60 வயது முதியவர் ஒருவர், இந்த வயதில் பட்டம் பெறும் ஆசையோடு புதிதாக வந்து வகுப்பில் சேர்ந்திருந்தார். தினமும் இவர் அருகில்தான் அமர்வார். சொந்தமாகத் தொழில் நடத்தும் செல்வந்த அவர். முதல் நாளே இவளது ஏழ்மைப் பின்னணியை விசாரித்து தெரிந்து கொண்டு, ஏழையா இருந்தாலும் நீ அழகில் பணக்காரி ” என்று சொல்லிவிட்டு விஷமமாக சிரித்தார். “என்பெண்டாட்டி செத்துட்டா பொண்ணுக்கு கல்யாணம் ஆகிடுச்சு, நான் தனியாத்தான் இருக்கேன்”

என்று ஏதோ உள் அர்த்தத்தோடு சொன்னார்.

இவளை குறுகுறுவென்று பார்ப்பது ஏடாகூட ஜோக் சொல்வது என அவர் தரும் சங்கடங்கள் தொடர்ந்தன. அவரை தவிர்க்க நினைத்து இவர் அடுத்த நாள் வேறு பெஞ்சில் அமர்ந்தாலும் சொல்லி வைத்தது போல வந்து பக்கத்தில் அமர்வார். யாரிடமாவது புகார் செய்யலாம் என்றால் சமுதாயத்தில் உயர்ந்த அந்தஸ்தில் இருக்கும் இவரைப்பற்றிச் சொல்வதை யார் நம்புவார்கள்?

வேதனையில் அவள் குழம்பிக் கொண்டிருந்த நேரத்தில்தான் அந்த அதிசயம் நிகழ்ந்தது. அடுத்த நாள் கண்ணியமான இடைவெளிவிட்டு அமர்ந்த அவர் வகுப்பு முடிந்து செவளியில் வந்ததும் அவளிடம் மன்னிப்பு கேட்டார். “என் மகளைவிட உனக்கு வயசு குறைவு. உன்கிட்ட நான் நடந்துக்கிட்ட முறை தப்பு”

“என் குடும்ப டாக்டர்கிட்ட போனேன். என்னைவிட 40 வயசு வித்தியாசம் இருக்கற பொம்பளையோட சேர்ந்த வாழ நினைக்கிறேன்னு சொன்னேன். அவர் கழிக்கறதுக்கு பதிலா கூட்டி பார்த்துட்டு போயும் போயும் நூறு வயசு கிழவியோடவா வாழ நினைக்கறே? எங்கே போச்சு உன் புத்தின்னு திட்டினார். அது தப்புன்னா இதுவும் தப்புதானே” என்றார் அவர்.

பார்க்கும் கண்ணோட்டம் மாறினால் பிரச்சனைகள் தீரும்

# 34. ரசம் - 34

இயற்பியல் படித்த அவன் நல்ல வேலையில் இருந்தான்; நல்ல சம்பளம்தான்! பிஸியான சூப்பர் மார்க்கெட்டில் விற்பனை மேலாளர். "நான் படிச்சு பிஸிக்ஸுக்கு இந்நேரம் எங்கேயோ விஞ்ஞானியா இருந்திரக்கணும். அதை விட்டுட்டு துவரம்பருப்பையும் உளுந்தையும் எடை போட்டுக்கிட்டு திரியறேன்" என்று சதா புலம்புவான். "எந்த வேலை செய்தாலும், அதை நேசிக்கணும்" என்று முதலாளி சொல்லிப் பாத்தார். அவனுக்கு மண்டையில் ஏறவில்லை.

ஒரு நாள் செய்தித்தாளில், 'இயற்பியல் படித்த ஆராய்ச்சி உதவியாளர் தேவை' என்ற விளம்பரத்தைப் பார்த்தான். விண்ணப்பித்தான். இங்கே கிடைக்கும் அதே சம்பளம்தான் தருவதாகச் சொன்னார்கள். 'அதே சம்பளத்துக்கு ஏன் போறே' என்று கேட்ட

முதலாளியிடம், "என் படிப்புக்கு ஏற்ற வேலை" என்று நக்கலாகச் சொல்லிவிட்டுப் போனான்.

முதல்நாளே தலைமை விஞ்ஞானி அவனை அழைத்து சில மரத்துண்டுகளைக் கொடுத்து, "மரங்களின் வெப்பக் கடத்து திறன் பற்றி ஆராய்ச்சி செய்கிறோம். நீ ஆராய்ச்சி செய்து ரிப்போர்ட் ரெடி பண்ணு" என்று சொன்னார். அவன் படித்த இயற்பியலுக்கும் இந்த ஆராய்ச்சிக்கூடத்துக்கும் சம்பந்தமே இல்லாதது போலதெரிந்தது. யாரும் அவனுக்கு வழிகாட்டவும் இல்லை. திக்குத் தெரியாத காட்டில் விட்டது போல் விழித்தான்.

நாட்கள் இப்படியே நகர, 'என்றைக்கு தலைமை விஞ்ஞானி கூப்பிட்டு விசாரிப்பாரோ' என தவித்தான் அவன். அன்று வீட்டுக்குத் திரும்பும்போது, என்சைக்ளோபீடியா விற்க வந்தான் ஒருவன். "நீங்கள் இதை வாங்கினால், ஒரு அறிவியல் கேள்விக்கு பல

பக்கங்களில் விளக்கமாக விடை கிடைக்கும் என்றான். அதை வாங்கியவன், 'மரங்களின் வெப்பக்கடத்து திறன் பற்றி பதில் வேண்டும்' என் கேள்வி எழுதிக் கொடுத்தான்.

மூன்று நாட்கள் கழித்து தலைமை விஞ்ஞானி அவனைக் கூப்பிட்டர், "ஒரு என்சைக்ளோபீடியா கம்பெனியிலிருந்து மரங்களின் வெப்பக்கடத்து திறன் பற் றி கட்டுரை கேட்டிருக்கிறார்கள். எழுதிக்கொடுத்துவிடு!" என கட்டளையிட்டார். அவன் கேட்ட கேள்வி அவனிடமே பதிலுக்கு வந்தது அறிந்து மயங்கி விழுந்தான் அவன்.

தெரியாத வேலையில் இறங்கக்கூடாது!

# 35. ரசம் - 35

*பச்சை சிக்னல் எரிவதைப் பார்த்து கொஞ்சம் வேகமாக தனது காரை ஓட்டிவந்தாள் அந்தப்பெண். ஆனால் சிக்னலை நெருங்குவதற்குள் பச்சை மறைந்து சிவப்பு விளக்கு எளிய, காரை ஸ்டாப்' கோட்டுக்கு முன்பாகவே நிறுத்திவிட்டள். பின்னாலேயே கார் ஓட்டி வந்த இளைஞன் அவசரக்காரனாக இருந்தான். சிக்னல் முடிந்தாலும் அந்தப்பெண் போயிருந்தால் தானும் பின்னாலேயே போயிருக்கலாம் என நினைத்திருப்பான் போல! விதிமுறையை மதித்து அந்தப் பெண் காரை நிறுத்தியதும், நீளமாக ஹார்ன் அடித்து தனது எதிர்ப்பை வெளிப்படுத்தினான். 'சிக்னலில் காத்திருக்கும்போது தேவையின்றி எதற்கு ஹார்ன் அடிக்கிறான்' என்று திரும்பிப்பார்த்தாள் அவள். ஆனால் அவன் முறைத்தான்.*

திரும்பவும் பச்சை சிக்னல் விழுவதற்கு முன்பாகவே ஹார்ன் அடித்து அந்தப் பெண்ணை அவசரப்படுத்தினான் அவன். பதற்றத்தோடு அவள் காரை நகர்த்த முய ற்சிக்கும்போது திடிரென அது ஆஃப் ஆகிவிட்டது. திரும்பவும் ஸ்டார்ட் செய்ய முய ற்சித்தும் பலன் இல்லை. இதற்குள் பச்சை சிக்னல் விழுந்துவிட்டது. பிஸியானரோட்டில் நிறைய வாகனங்கள் சேர்ந்துவிட்டன. தூரத்தில் இருந்த வாகனங்கள் நிலைமையைப் புரிந்துகொண்டு வளைந்து வந்து முன்னேறின. இவள் காரை ஒட்டியபடி பின்னாலேயே நின்ற இளைஞனால் போக முடியவில்லை. விடாமல் ஹார்னை அடித்துக்கொண்டே இருந்தான். காதுகளைக் கிழிக்கும் ஓசையில் அது இருந்தது.அந்தப் பெண் வேகமாக இறங்கி வந்தாள். இளைஞனின் கார் கதவைத் தட்டிக் கூப்பிட்டு, “என்ன பிரச்சனைன்னு தெரியலை. கார் ஸ்டார்ட் ஆக மாட்டேங்குது. ப்ளீஸ், கொஞ்சம் பார்க்க

முடியுமா? நீங்க ஹார்ன் அடிக்கற ஸ்டைலைப் பாத்தா, உங்களுக்கு கார் மெக்கானிசம் நல்லாத் தெரியும்னு நினைக்கறேன். நீங்க சரிபார்க்கற வரைக்கும் உங்க வேலையை நான் செய்யறேன். உங்க சார்பா, உங்க கார் ஹார்னை நான் விடாம அடிச்சுக்கிட்டே இருக்கேன் என்றாள் கூலாக சிரித்தபடி அந்த இளைஞன் திகைத்தான்.

*பிரச்சனைகளை புன்சிரிப்போடு அணுகுங்கள் !*

# 36. ரசம் - 36

நகரத்து இரைச்சல் அலுத்துப்போய், ஓய்வுக்குப் பிறகு கிராமத்தில் செட்டிலானார் அந்தப் பெரியவர். அவர் குடியேறிய வீடு ஒரு பள்ளிக்கூடத்துக்கு அருகில் இருந்தது. இவர் போனபோது பள்ளிக்கு கோடை விடுமுறை என்பதால் அமைதியின் தாலாட்டில் நிம்மதியாக இருந்தார்.

பள்ளி திறந்ததும் வந்தது பிரச்சனை. சில துடுக்கு மாணவர்கள் வேலி தாண்டி வீட்டுக்கு வந்து கதவு, ஜன்னல்களை படபடவென்று அடித்து தாளம் போட்டனர். கதவைத் திறந்தால் ஓடிவிடுவார்கள். உள்ளே போனதும் திரும்பவும் தாளம், காலையில், உணவு இடைவேளையில், மாலை பள்ளி விடுகையில் இது தொடர்கதையாக இருந்தது. புகார் செய்தும் பயனில்லை.

*வேறு வழியின்றி ஒருநாள் இவரே இந்த மாணவர்களை அழைத்தார். அவர்கள் ஆறுபேர் இருந்தார்கள். "உங்களது இசை எனக்கு மிகவும் பிடிக்கிறது. தினமும் அரைமணி நேரமாவது இப்படி வந்து கதவு, ஜன்னல்களில் தவில் வாசியுங்கள். உங்களுக்கு ஆளுக்கு ஒரு ரூபாய் தினம் தருகிறேன். முடிந்தால் லீவு நாட்களில் கூட வாருங்கள் என்றார்.*

*'கரும்பு தின்னக் கூலியா' என்பதுபோல பரவசப்பட்ட பையன்கள் தினமும் உ ற்சாகமாக வந்து அடித்துவிட்டு, காசு வாங்கிப்போனார்கள். பத்து நாட்கள் ஆனதும் பெரியவர் சோகமாக வந்தர். "பென்ஷனில் குடும்பம் நடத்தும் எனக்கு பட்ஜெட் உதைக்கிறது. இனிமேல் ஆளுக்கு ஐம்பது பைசாதான்!" என்றார். பையன்களுக்கு கொஞ்சம் ஏமாற்றமாக இருந்தாலும் வந்தார்கள். அரைமணி அடி என்பது கால்மணி நேரமானது.*

இன்னும் பத்து நாட்கள் போனதும் பெரியவர் இன்னும் சோகமாக வந்தார். "பெண்ஷனைக் குறைச்சுட்டாங்க. அதனால் இனிமே இருபத்தஞ்சு பைசாதான் தரமுடியும்" என்றார். கோபமான ஒரு பையன், "கிழவனுக்கு ஆசையைப் பாருடா! இருபத்தஞ்சு பைசா செல்லாதுன்னு கவர்ன்மென்டே சொல்லிடுச்சு, அந்த காசுக்குஎல்லாம் எங்களால டிரம்ஸ் அடிக்க முடியாது" என்றபடி மற்றவர்களையும் கூட்டிக்கொண்டு வெளியேறினான். பெரியவர் வீட்டில் அன்றுமுதல் அமைதி மீண்டும் குடிகொண்டது.

பிரச்சனைகளை புதிய கோணத்தில் அணுகுங்கள் !

# 37. ரசம் - 37

அவனது தொழில், நாய்களுக்குப் பயிற்சி அளிப்பது. உயர்ரக நாய்களை வளர்க்கும் பணக்காரர்கள் அந்த நாய்களுக்கு சில பயிற்சிகளைத் தர விரும்புவார்கள். வீட்டுக்குள் அசுத்தம் செய்யாமல் இருப்பது, குழந்தைகளோடு விளையாடுவது, பந்து, பேப்பர் போன்றவற்றை எடுத்துத் தருவது... இப்படி ஏராளம் விஷயங்கள் அடங்கியது இந்தப் பயிற்சி.

பல நாய்களுக்குப் பயிற்சி தரும் அவன், தன் வீட்டிலும் ஒரு நாய் வளர்த்தான். அதற்கும் அவன்தான் டிரெய்னர். ஒரு குழந்தையைப் போல அதை நேசித்துப் பயிற்சிகள் கொடுத்தான். “பேச முடியாதே தவிர, நாம் செய்யற எல்லா வேலைகளையும் இதுவும் செய்யும்” என எல்லோரிடமும் பெருமை அடித்துக்கொள்வான்.

சமீப நாட்களாக அந்த நாயிடம் ஒரு கெட்ட பழக்கம். அவன் துணி துவைத்து கொடியில் காயப்பபோட்டால், எகிறிச் சென்று இழுத்து தரையில் போட்டுவிடும். செல்லமாக அதட்டியும் கேட்பதாக இல்லை. ஈரத்துணிகளை தரையில் இழுத்துப்போட்டு அழுக்காக்கிவிடுவதால் இம்சையாக இருந்தது. நாய்க்கு பாய்ந்து மொட்டை மாடியில் துணி காய வைக்க நேர்ந்தது.

தன் முழுத் திறமையையும் பயன்படுத்தி நாய்க்கு இந்த கெட்ட பழக்கத்தை நீக்கும் பயிற்சி தந்தன் இவன். உடம்பு துடைக்கும் டவல் ஒன்றை கொடியில் போட்டான். நாய் அதை நெருங்கும்போது கோபத்தோடு திரட்டினார். இப்படி நாய் எடுக்க முய ற்சிப்பதும், அவன் திட்டுவதும் தொடர்ந்தது. இரண்டு வாரங்கள் கழித்து ஒருநாள் இப்படி துண்டைக் காயப்போட்ட போது நாய் அதை நெருங்கவே இல்லை.

திருந்திவிட்டது என மகிழ்ந்தான் அவன். அடுத்த நாள் வீட்டுக்குள் காயப்போட்டுவிட்டு வெளியில் போனான். திரும்பி வந்து பார்த்தால் எல்லா துணிகளும் அழுக்கேறி தரையில் மூலைக்கு மூலை ஒன்றாகக் கிடந்தன. இந்த உடம்பு துடைக்கும் டவலை மட்டும் நாய் தொடவில்லை. அது கொடியில் பத்திரமாக இருந்தது.

*சில பழக்கங்களை பயிற்சியால் மாற்றிவிட முடியாது!*

# 38. ரசம் - 38

புகழ் பெற்ற அந்த டூத்பேஸ்ட் நிறுவனத்துக்கு சமீப நாட்களாக ஒரு பிரச்சனை. கடையில் 50 கிராம் டூத் பேஸ்ட் வாங்கி அட்டைப்பெட்டியைப் பரித்துப்பார்த்தால் உள்ளேபேஸ்ட் டியூப் இருப்பதில்லை. கடையில் வந்து சொன்னாலும் மாற்றித் தருவதில்லை என பலரிடமிருந்து புகார்கள்.

டூத்பேஸ்ட்டை டியூபில் அடைப்பது, அந்த டியூபை அட்டைப்பெட்டியில் போட்டு ஒட்வது என எல்லாவற்றையும் மெஷின்களே செய்கின்றன. கன்வேயர் பெல்டில் வரிசையாக ஒவ்வொரு இடத்திலும் வேலைகள் முடிந்து, கடைசியாக பெட்டிகளில் வந்து அவை நிரம்பிவிடும். இயந்திரக் கோளாறு காரணமாக சில அட்டைப்பெட்டிகளில் டியூப் போடாமலே ஒட்டப்படுகிறது என்பது புரிந்தது.

இதை சரிசெய்ய நிறுவனத்தின் எஞ்சினியரிங் பிரிவுக்கு கட்டளை போனது. அவர்கள் பல நிபுணர்களிடம் ஆலோசித்து, 10 கோடி ரூபாய் செலவழித்து ஒரு சிஸ்டம் உருவாக்கினார். கன்வேயர் பெல்டில் ஒரு இடத்தில் நுண்ணிய தராசு பொருத்தப்பட்டது. டியூப் இல்லாத காலி பெட்டி எடை குறைவாகத்தானே இருக்கும். அதை தராசு உணர்ந்ததும் அலாரம் அடிக்கும். கன்வேயர் இயக்கம் நின்றுவிடும். ஒரு ஆள் அதை அப்புறப்படுத்தியதும் பழையபடி எல்லாம் இயல்பாகும். தினமும் நூற்றுக்கு குறையாமல் காலி டப்பாக்களை தராசு கண்டறிவதாக முதலாளிக்கு அறிக்கை வந்தது. தராசு அருகே சேர்போட்டு உட்கார்ந்து இதைக் கணக்கெடுத்தார் ஒரு அதிகாரி.

சில நாட்களில் முதலாளி அங்கு போனார். தராசுக்கு சற்று முன்பாக கன்வேயரை ஒட்டி பெரிய

ஃபேன் ஓடியது. அது ஏராளமான காற்றை வாரியிறைக்க, காலி டப்பாக்கள் அந்தக் காற்றின் வேகத்திலேயே கீழே விழுந்தன. "காலி பெட்டியை எடுக்க ஒரு வயசான ஆளை வேலைக்கு வச்சிருக்கோம் சார்! அடிக்கடி தராசுகிட்ட ஓடிவர முடியலைன்னு அந்த ஆள் இப்படி பண்றான் சார். இப்போகூட டீ சாப்பிட வெளிய போயிட்டான்" என்று புகார் சொன்னார் தராசு அதிகாரி. இந்த சிம்பிளான விஷயத்துக்கு 10 கோடி ரூபாய் செலவழித்தோமே என மயக்கம் வந்தது முதலாளிக்கு.

அனுபவ அறிவை அலட்சியம் செய்யாதீர்கள்!

# 39. ரசம் - 39

இன்சூரன்ஸ் பாலிசிகள் பற்றி போனில் விவரித்து, முகம் தெரியாத நபர்களிடம் அவற்றை விற்க முயற்சிக்கும் டெலிகாலர்' பெண் அவர். அன்றைக்கு அவள் கைபோன போக்கில் ஒரு நம்பரை அழைத்த போது, மறு முனையில் போனை எடுத்தது ஒரு சிறுவன்.

"ஹலோ" என்றான் சன்னமான குரலில். "வீட்ல அம்மா இருக்காங்களா?" என்றாள் டெலிகாலர் பெண். "இருக்காங்க.." "போனை அவங்ககிட்ட கொடுக்கமுடியுமா?" "சத்தமா பேசாதீங்க... அம்மா பிஸியா இருக்காங்க" என்றான் அவன், இன்னும் மெல்லிய குரலில்."அப்பா இருக்காரா..?." என்ற அவளின் அடுத்த கேள்விக்கு, "அவரும் பிஸியா இருக்கார்" என்று பதில் சொன்னான் சிறுவன்.

*அவளுக்கு லேசாக சலிப்பு வந்தது. "வீட்ல வேற யாராவது இருக்காங்களா?" என்றாள். "தீயணைப்புத் துறையிலிருந்து நிறைய பேர் வந்திருக்காங்க..." "அவங்கள்ல யார்கிட்டயாவது பேச முடியுமா?" "இல்ல.. அவங்களும் பிஸியாதான் இருக்காங்க!" "அவங்களைத் தவிர வேறு யாராவது இருக்காங்களா?" "போலீஸ்காரங்களும் கொஞ்சம்பேர் வந்திருக்காங்க." "அவங்ககிட்ட நான் பேசலாமா?" "முடியாது. அவங்களும் பிஸி!" அந்தப் பெண்ணுக்கு இது விநோதமாகப் பட்டது. "எல்லாரும் அப்படி பிஸியா என்னதான் செய்துக்கிட்டு இருக்காங்க?" என்று குழப்பத்தோடு கேட்டாள்.*

*சிறுவன் நிதானமாக பதில் சென்னான் .... "அப்பா, அம்மாவோட நான் கண்ணாமூச்சி விளையாடிகிட்டு இருந்தேன். ரெண்டு மணி நேரமா மறைஞ்சுக்கிட்டு இருக்கேன். அவங்க கூப்பிட்டிருந்தா நானே*

*போயிருப்பேன். என்னை கண்டுபிடிக்க முடியாம பதறிப்போய் எல்லாரையும் வரவழைச்சுட்டாங்க. எல்லாரும் என்னைத்தான் தேடிக்கிட்டு இருக்காங்க!”*

*குழந்தைகளின் குறும்புகளை ரசிக்கக்*
*கற்றுக்கொள்ளுங்கள் !*

# 40. ரசம் - 40

பலமுறை பணம் கேட்டும் கிடைக்காததால், இம்முறை மகன் பழனியுடன் வந்திருந்தார் சிதம்பரம். "பையன் படிச்சுட்டு வேலை இல்லாம இருக்கான். மெக்கானிக் ஷாப் வைச்சு, சொந்தத்தொழில் செய்யணும்னு ஆசைப் படறான். தொழில்ல வர்ற பணத்திலிருந்து, கொஞ்சம் கொஞ்சமாக திருப்பிக்கொடுத்தடறேன். நல்ல நிலைமையில் இருக்கிற நீதான் தயவு பண்ணணும்." சிதம்பரம் தன் நண்பர் திருப்பதியிடம் கெஞ்சினான். )

"உன் மகன் தொழில் செய்து, திருப்பிக் கொடுக்கிற மூஞ்தியைப் பார்த்தா தெரியலை. என்கிட்டே கையேந்தி நிற்கிறதுக்கு உனக்கு வெட்கமாயில்லை...?" என்று திருப்பதி சொன்னதும் பழனிக்கு ஆத்திரமாக வந்தது. இருந்தாலும் அவரே, "சரி.. சரி.. இந்த வெற்றுத் தாளில் ரெண்டு பேரும் கையெழுத்துப்போட்டு,

பணத்தை வாங்கிட்டுப்போங்க” என்று திருப்பதி சொன்னதும் அடங்கிப்போனான். மாலையில், திருப்பதியும் சிதம்பரமும் சந்தித்தார்கள்.

“நாம் நண்பர்களர்தான். இருந்தாலும் கிடைத்தத பணத்தை அதற்குரிய குறிக்கோளுக்குப் பயன்படுத்தினால்தான் கடனை அடைத்து, இழந்த மானத்தை மீட்க முடியும்... என்பதை இளைஞனான உன் மகனுக்கு உணர வைக்கத்தான், உன்னை அவமானப்படுத்துவதுபோல நாடகமாடினேன். பணத்தின் அருமையை அவன் மனதில்ஆழப் பதிய வைப்பதற்கு எனக்கு வேறு வழி தெரியவில்லை, என்னை மன்னிச்சிடு” என்று தன் கையைப் பிடித்து வணங்கிய நண்பனை இரட்டை நன்றியுடன் பார்த்தார் சிதம்பரம்.

அவமானங்கள் தரும் பலன் வெகுமானங்கள்!

# 41. ரசம் - 41

நகரத்துக்குப் பக்கத்தில் இருக்கும் மலைக்காட்டில் தீ கொழுந்துவிட்டு எரிவதாக ஒரு பத்திரிகை புகைப்படக்காரருக்கு தகவல் கிடைத்தது. தீயணைப்புக் குழுவினர் ஹெலிகாப்டரில் சென்று வேதிப்பொருட்களைத் தூவி தீயைக் கட்டுப்படுத்தும் முய ற்சியில் இருப்பதாக சொன்னார்கள். ஒரு விமானத்தில் சென்று அந்த ஹெலிகாப்டருக்கும் மேலே பறந்து புகைப்படம் எடுத்தால், அது பிரத்யேகப்படமாக இருக்கும் என்று அவருக்குத் தோன்றியது. உடனே அலுவலகத்தில் சொன்னார்.

அடுத்த சில நிமிடங்களில் அவருக்குத் தகவல் வந்தது. “இரண்டுபேர் மட்டுமே செல்லக்கூடிய சிறிய பயிற்சி விமானம் ஒன்று தயாராக இருக்கிறது. அதில் ஏறிச்சென்று புகைப்படம் எடுத்து வரவும்!”

அவர் உடனே விமான நிலையம் சென்றார். ஓடுபாதை அருகே இருந்த பாதுகாப்பு அதிகாரிகளிடம், "பயிற்சி விமானம் எங்கே இருக்கிறது?" என்று கேட்டார். அவர்களை கைகாட்டிய இடத்தில் நான்கைந்து குட்டி விமானங்கள் இருந்தன. அதில் ஒன்றில் ஓட்டுவதற்கு தயாராக ஒருவர் அமர்ந்திருப்பதைப் பார்த்தார். அதுதான் தனக்கான விமானம் என நினைத்துக்கொண்ட அவர், வேகமாக சென்று அவர் அருகில் அமர்ந்து "டேக் ஆஃப்!" என்று கட்டளையிட்டார். அவரும் உடனே வானில் எழும்பினார்.

மலைக்காடு இருக்கும் திசையில் அவரை பறக்கச் சொன்ன புகைப்படக்காரர், காட்டுத்தீ எரியும் இடத்துக்கு அருகே செல்லும்போது தன் கேமரா பையை திறந்தார். "கொஞ்சம் தாழ்வாகப் பறந்து போங்கள். நான் போட்டோ எடுக்க வேண்டும்"

*என்றார்.*

*விமான ஓட்டி விசித்திரமாக அவரைத் திரும்பிப்பார்த்து "நீங்கள் யார்?" என்று கேட்டார்.*

*"என்ன இப்படிக் கேட்கிறீர்கள்? நான் பத்திரிகை போட்டோகிராபர். இதை பத்திரிகைக்காக போட்டோ எடுக்க வந்திருக்கிறேன்!" என்றார் இவர்.*

*விமான ஓட்டி இப்போது இன்னும் கவலையான குரலில் சொன்னார். "விமானத்தை எப்படித் தரையிறக்வது என்று எனக்குக் கற்றுத் தருவதற்கு வந்த பயி ற்சியாளர் என்றுதானே உங்களை நினைத்தேன்!"*

*இப்போது புகைப்படக்காரருக்கு உயிர் கவலையில் மயக்கம் வந்துவிட்டது. எதையும் விசாரிக்காமல் யூகத்தின் அடிப்படையில் நம்பக்கூடாது!ரசம் - 42*

திருட்டு வழக்கில் கைதாகியிருந்தான் அவன். நகரின் பிரபல நகைக்கடையில் பட்டப்பகலில் நகை வாங்குவது மாதிரி வந்து கொள்ளையடித்ததாக வழக்கு கோர்ட்டில் விசாரணை விறுவிறுப்பாக நடந்து கொண்டிருந்தது. தனது வக்கீல் சரியாக வாதாடவில்லையோ என்ற சந்தேகம் அவனுக்கு எழுந்தது. போலீஸ் கூட்டிவந்த சாட்சிகளை அவர் சரியாக குறுக்குவிசாரணை செய்யவில்லை போலத் தோன்றியது. வழக்கில் சொதப்பி தன்னை மாட்டி வைத்துவிடுவாரோ என்று பயம் பிடித்துக் கொண்டது. அதனால் அவரை நீக்கிவிட்டு தானே வாதாடப்போவதாக நீதிபதியிடம் அனுமதி கேட்டான். சட்டத்தில் அதற்கு இடம் இருந்ததால் அவரும் அனுமதித்தார்.

எல்லாம் நன்றாகத்தான் போய்கொண்டிருந்தது. போலீஸ் தரப்பு சாட்சிகளை அவன் திறமையாக

*குறுக்குவிசாரணை செய்து மடக்கியதை பார்த்து சில வக்கீல்களே வியந்தனர். கோர்ட் வளாகம் முழுக்க அவனைப் பற்றிய பேச்சாகவே இருந்தது. இறுதிநாள் விசாரணையில் கடையின் முதலாளி சாட்சி சொல்ல வந்தார். இவன் கடையில் திருடிய விதம் பற்றி விலாவாரியாக விளக்கிய அவர், இவனைப் பார்த்து கையை நீட்டி நீட்டி சத்தமாகப் பேசினார். கொள்ளையை விவரிப்பதுபோல அவர் ஆணித்தரமாகப் பேச, ஆத்திரம் எகிறியது அவனுக்கு! கோபத்தில் கொந்தளித்த அவன், தான் எங்கு இருக்கிறோம் என்பதைக்கூட மறந்து பொய் சொல்லாதே! அன்றைக்கே உன்னை கத்தியால் குத்தி கொலை பண்ணியிருக்கணும்" என்று கத்திவிட்டான். அந்த நொடியில் மொத்த நீதிமன்றமும் நிசப்தமாகிவிட, அப்போதுதான் தன் தவறு புரிந்தது அவனுக்கு. உடனே சமாளித்து, "ஒருவேலை அந்தத் திருடன் நானா இருந்திருந்தா..."*

அதன் பின் அவனுக்கு தண்டனை தர நீதிபதிக்கு அதிக நேரம் தேவைப்படவில்லை.

## தெரியாத தொழிலில் இறங்கக் கூடாது

# 42. ரசம் - 43

நாற்பந்தைந்து வயதுவரை வெறியாக உழைத்து சம்பாதிக்க வேண்டும். அதன்பிறகு ஏதாவது ஒரு மலைப்பிரதேசத்தில் போய் செட்டிலாகிவிட வேண்டும் என்பது அந்த தம்பதியின் லட்சியம். சென்னையின் எந்திர வாழ்க்கையிலும் புழுக்கத்திலும் அவர்கள் வெறுத்துப் போயிருந்தார்கள்.

நினைத்தது போலவே கொடைக்கானல் மலையில் ஒரு பழைய வீடு கிடைத்தது. பெயிண்டை பார்த்தே வருடக்கணக்கான சுவர்களோடு இருந்தது வீடு. எழுபதுவயதைத் தாண்டிய இரண்டு சகோதரிகள் மட்டுமே வீட்டில் இருந்தார்கள். அழகிய தோட்டத்தோடு இருந்த வீடு பிடித்தது. வாங்கிவிட்டார்கள்.

வீட்டை காலி செய்து கிளம்பும்போது அந்த மூதாட்டிகள் “மத்த நாள்ல பிரச்சனை இருக்காது. ஆனா குளிர் சீசன்ல என்று ஏதோ சொல்ல வர,”அதெல்லாம் பரவாயில்லை. நாங்க பார்க்காத குளிரா? என்று இடைமறித்தார்கள் தம்பதிகள். அந்த மூதாட்டிகள் திரும்பவும் ஏதோ சொல்ல வந்தனர். அதைக் கேட்கும் நிலையில் இல்லை தம்பதியர். அவர்களை துரத்திவிட்டு வீட்டுக்குள் நுழைவதிலேயே குறியாக இருந்தனர்.

குளிர் காலம் ஆரம்பித்தது. மற்ற நாட்களிலேயே நடுக்கும் குளிர் அந்த நாட்களில் எலும்புகளை ஏடுருவி வதைத்தது. “பல்லுபோன பாட்டிகளே இதை தாங்கிட்டாங்க நமக்கு என்ன இருக்கு?” என்று ஆரம்பத்தில் அலட்சியம் செய்தவர்களால், அதன் பிறகு தாக்குப் பிடிக்க முடியவில்லை. பழை காலத்து வீடு என்பதால் பனியில் நனைந்த சுவர்கள் ஈரத்தை வீட்டுக்கு உள்ளேயும் இழுத்தன. வீடே ஏதோ தண்ணீர்

ஊற் றி நனைத்தது போல இருந்தது. தாங்க முடியாமல் ஒரு நாள் பாட்டிகளுக்கு போன் போட்டு, "நீங்கள் எப்படி சமாளித்தீர்கள்?" என்று கேட்டார்கள்.

"வீடு காலி பண்ணும்போது அதைத்தான் நாங்க சொல்ல வந்தோம். நீங்க காதுல வாங்கவே இல்லை. குளிர் காலத்துல நாங்க வீட்டைப் பூட்டிட்டு மதுரைக்கு வந்துடுவோம். நீங்களும் அப்படி எங்கேயாவது போயிடுங்க! என்று அட்வைஸ் செய்தனர் மூதாட்டிகள்.

### எதையும் முழுமையாகக் கேட்கவேண்டும்

# 43. ரசம் - 44

திருமணம் முடிந்த அடுத்த வாரமே தேனிலவுக்கு மனைவியோடு இலங்கை வந்திருந்தான் அவன். “அமெரிக்காவில் இருப்பது போன்ற கேஸினோக்கள் இங்கும் வந்துவிட்டன. இந்திய ரூபாயை வைத்தே சூதாடலாம். அவசியம் போங்கள் மனைவி வந்த அதிர்ஷ்டம் உங்களுக்கு கொட்டிக் கொடுக்கலாம் என ஆசை காட்டினான் அவனுக்கு ஊர் சுந்நி காட்டிய கைடு.

திரைப்படங்களில் சூதாட்ட விடுதிகளை பார்த்திருக்கிறான். நேரில் பாக்க அவனுக்கு ஆசை. மனைவி வந்த அதிர்ஷ்டம் உங்களுக்கு கொட்டிக் கொடுக்கலாம் என்ற கைடின் ஆசை வார்த்தைகளும் அவனைத் துரத்தின.

மனைவியை அறையில் ஓய்வெடுக்க சொல்விட்டு

*போனான். வெறும் 500 ரூபாயை முதலில் ஒரு டேபிளில் கட்டினான். அது இரண்டு மடங்காக வந்தது. ஆயிரம் ரூபாயை அடுத்தமுறை கட்டினான். அது ஐந்து மடங்கு ஆனது. இப்படியாக ஒவ்வொரு ஆட்டத்திலும் அவன் பக்கம் அதிர்ஷ்ம் இருந்தது. மனைவி வந்த அதிர்ஷ்டம் என்ற வார்த்தைகள் மந்திரச் சொல்லாக மனதுக்குள் ஒலித்துக்கொண்டிருந்தது.வெறும் இரண்டே மணி நேரத்தில் அவன் கையில் லட்சக்கணக்கில் பணம் சேர்ந்துவிட்டது. கிளப்பில் எல்லோரும் அவனை பொறாமையோடு பார்த்தார்கள். கிளம்பலாம் என யோசித்தவன் கடைசி கடைசியாக ஒரு அதிரடி ஆட்டம் ஆட முடிவெடுத்தான். 'மனைவி வந்த அதிர்ஷ்டத்தை இன்னொருமுறை சோதிக்கலாம்.'*

*கையில் இருந்த மொத்த பணத்தையும் கட்டினான். எண்ணிப்பார்த்தார்கள். ஐம்பது லட்சம் ரூபாய். ஜெயித்தால் இரண்ட கோடி வரும். தோற்றால்*

*மொத்தமும் போ ச்சு! எண்கள் வரைந்த சக்கரம் சுழல எல்லோரும் அவன் முகத்தையே பார்த்தார்கள். அந்த மோசமான ஆட்டத்தில் அவன் தோற்றான். மொத்தமும் போச்சு!*

*சரியாக அப்போது மனைவிடமிருந்து போன் வந்தது. "என்ன டார்லிங்... முடிஞ்சுதா? என்ன ரிசல்ட்?"*

*அவன் டென்ஷனில் கத்தவில்லை. "உன் துரதிர்ஷ்டத்தால் ஐம்பது லட்ச ரூபாய் போச்சு என கோபப்படவில்லை. புன்னகையோடு சொன்னான்"500ரூபாய்தான் நஷ்டம்."*

*இழப்புகளின் கணக்கு புரிந்தவர்களுக்கு எப்போதும் ஏமாற்றம் இல்லை.*

# 44. ரசம் - 45

வேலைக்கான நேர்முகத் தேர்வுக்கு வந்திருந்தார் அந்த இளம்பெண். அவரது தகுதியும் அனுபவமும் நிறைவாக இருந்தன. அந்த நிறுவனத்துக்கு இப்படி ஒரு நபர்தேவையாக இருந்தார். அந்த பெண்ணுக்கும் இந்த வேலை தேவையானதாக இருந்தது. கிட்டத்தட்ட வேலையில் சேர்வது உறுதியாகிவிட்ட நிலையில், சம்பளம் ம ற்றும் இதர சலுகைகள் குறித்த பேரம் ஆரம்பித்தது.

அந்தப் பெண் கேட்ட சம்பளத்தைத் தருவதற்கு நிறுவனம் தயாராக இருந்தது. ஆனால் அவர் கேட்ட இதர சலுகைகள்தான் விநோதமாக இருந்தன. மாதாந்திர மளிகைக்கடை பட்டியல் போல அது அவ்வளவு நீளம்...

நிறுவன மேனேஜர் குழம்பிவிட்டார். “சம்பளம் கணிசமா தர்றோம். அது போக பெட்ரோல் அலவன்ஸ், போன் அலவன்ஸ் மட்டும் தர்றதுதான் இங்க பழக்கம் நீங்க கேக்கற மத்த எல்லாம் எங்கேயும் வழக்கத்துலயே இல்லாத விஷயங்கள் ஆச்சே! என்றார்.

அந்த பெண் சளைக்கவில்லை. “நான் ஏற்கனவே வேலை பார்த்த கம்பெனியில இதைவிட நிறைய சலுகைகள் உண்டு. குருப் இன்சூரன்ஸ் திட்டத்துல எங்க எல்லாருக்கும் அஞ்சு லட்ச ரூபாய்க்கு இன்ஷ்யூர் பண்ணி, அதுக்கான பணத்தையும் அவங்களே கட்டிடுவாங்க, இது தவிர சாதாரண மருத்துவ செலவுகள் வந்தா, ஹாஸ்பிடல் பில்லை ஆபீஸ்ல கொடுத்து பணம் வாங்கிக்கலாம். பசங்க ஸ்கூல் ஃபீஸ் கட்டவும் கணிசமாக ஒரு தொகை தருவாங்க..” என்று சொல்லிக்கொண்டே போனார்.மேனேஜர் இடையில் குறுக்கிட்டு. “நீங்க சொல்வதைப் பார்த்தா ரொம்ப

*நல்ல கம்பெனியா தெரியுதே! அப்புறம் ஏன் அந்த வேலையைவிட்டுட்டு இங்கே வர்றீங்க?"*

அந்த பெண் சின்ன தயக்கத்தோடு பதில் சொன்னார் ... *"அந்தக் கம்பெனி திவால் ஆகிடுச்சு சார்!"*

மேனேஜர் அவரைப் பார்த்த பார்வை, *'இப்படியெல்லாம் செலவு செய்தால் எப்படி திவால் ஆகாமல் இருக்கும்?"* என்று கேட்டது.

*நியாயமற்ற சலுகைகளை எதிர்பார்க்கக் கூடாது*

# 45. ரசம் - 46

தன்னை திறமைசாலி என நினைத்துக்கொண்டிருந்த கம்யூட்டர் எஞ்சினியர் அவன். அலுவலகத்தில் சேர்ந்த முதல் நாளிலிருந்தே அவன் வேலையில் அலட்சியம் தெரிந்தது. எதையுமே சீரியஸாக எடுத்துக்கொள்ள மாட்டான். எப்போதும் யாரிடமாவது புலம்பிக்கொண்டிருப்பான். “என் திறமைக்கும் தகுதிக்கும் இந்த ஆபீஸ்ல நான் வாங்கற சம்பளம் ரொம்ப கம்மி. என் அளவுக்கு திறமை இல்லாதவனுக்கெல்லாம் இந்த ஆபீஸ் கொட்டிக் கொடுக்குது. இந்த வேலையை விட்டுட்டு வெளியில போனா என்னைக் கொத்திக்கிட்டு போக பல பேர் காத்துக்கிட்டு இருக்காங்க. சரி, வீட்டுக்கு பக்கமா ஆபீஸ் இருக்கேன்னு எல்லாத்தையும் பொறுத்துக்கிட்டு வேலை பார்க்க வேண்டியிருக்கு!” என்பதாகவே அவன்

புலம்பல்கள் இருக்கும்.

அங்கு வேலை பார்க்கும் அனைவருமே திறமையான கம்ப்யூட்டர் எஞ்சினியர்கள்தான், அவன் மனம் புண்படக்கூடாதே என்பதற்காக எதுவும் சொல்லாமல் பொறுமையாக இருந்துவிடுவார்கள். நாளாக ஆக இவனது புலம்பல்கள் ம ற்றவர்களின் வேலையை கெடுப்பதாக நிர்வாகம் நினைக்க . ஒருநாள் அவன் வேலை நீக்கம் செய்யப்பட்டான்.

அடுத்த நாளே வேலை கேட்டு அவன் பல நிறுவனங்களுக்கு இ-மெயில் கடிதம் அனுப்பினான். “இத்துடன் என் திறமைகளையும் படிப்பையும் உணர்த்தும் ரெஸ்யூமை அட்டாச்மெண்டாக இணைத்துள்ளேன். இதை பார்த்தால் நீங்களாகவே எனக்கு வேலை கொடுத்துவிடுவீர்கள் என்பதாக அந்தக் கடிதம் இருந்தது.

நாட்கள் நகர்ந்தாலும் அவனது கடிதத்துக்கு எந்த பதிலும் இல்லை. இருபது நாட்கள் கழித்து ஒரே ஒரு பதில் வந்திந்தது. உங்கள் கடிதம் படித்தேன். ஆனால் நீங்கள் ரெஸ்யூமுக்கு பதிலாக ரெசிபி ஒன்று இணைத்திருந்தீர்கள். அதன்படி செய்து பார்த்த ஆப்பிள் அல்வா பிரமாதமாக இருந்தது. ஆனாலும் எங்கள் நிறுவனத்தில் சமையல்காரர் வேலை எதுவும் காலியாக இல்லை! என்று அல்வா கொடுத்தது அந்த கடிதம். 'ஒரு அட்டாச்மென்ட்டே ஒழுங்காக இணைக்கத் தெரியாத கம்ப்யூட்டர் எஞ்சினியருக்கு எப்படி வேலை கொடுப்பார்கள்'' என முதல் முறையாக வெட்கப்பட்டடான் அவன்.

திறமைசாலி என்ற சான்றிதழ், நமக்கு நாமே கொடுத்துக் கொள்வது இல்லை !

# 46. ரசம் - 47

அந்த அலுவலகத்தில் துப்புரவுப் பணியாளராக வேலை பார்க்கும் பெண் அவர். இருபது வயதில் பணிக்கு வந்தவர் கடந்த நாற்பது ஆண்டுகளாக வேலை செய்கிறார். அதிகாலையிலேயே வந்து அலுவலகம் துவங்குவதற்கு முன்பாக குப்பைகளை அகற் றி சுத்தமாக்கி வைப்பது அவர் கடமை. ஒரு நாள்கூட தாமதமாக வந்ததில்லை. அனாவசியமாக லீவு எடுத்ததில்லை. சம்பளம் மிகவும் குறைவு என்றெல்லாம் புலம்பியதில்லை. சின்னதாக ஒரு முகச்சுளிப்போடு கூட அவர் வேலை பார்த்ததாக யாருக்கும் ஞாபகம் இல்லை.

பெரிய நிறுவனங்கள் பலவும் சுத்தம் செய்யும் பொறுப்பை அதற்கென இருக்கும் தனியார் கம்பெனிகளுக்கு கான்டிராக்ட் விடும் வழக்கம்

வந்தபிறகும்கூட, இந்த பெண்மணியை நீக்கிவிட்டு அப்படிச் செய்யவேண்டும் என்ற நினைப்பு முதலாளிக்கு வந்ததில்லை.

இந்த மாதத்தோடு அவர் பணியிலிருந்து ஓய்வு பெறுகிறார். ஊழியர்கள் எல்லோரும் அவர்மீது மிகுந்த மதிப்பு வைத்திருந்தார்கள். எல்லோரும் சேர்ந்து அவருக்கு நெகிழ்ச்சியான விருந்து தர ஆசைப்பட்டார்கள். முதலாளிக்கும் அதில் விருப்பமே! வாழ்க்கையிலேயே அவர் சாப்பிட்டிராத நட்சத்திர ஒட்டலிலிருந்து ஸ்பெஷல் அயிட்டங்கள் ஆர்டர் செய்து அவர் உட்பட எல்லோருக்கும் விருந்து. அப்புறம் காஸ்ட்லியான தங்க சங்கிலி ஒன்றை அவருக்குப் பரிசாகத் தருவது திட்டம்.

ரகசியமாக திட்டமிட்டாலும் அந்தப் பெண்மணிக்கு விஷயம் தெரிந்துவிட்டது. முதலாளியிடம் போய், இந்தப் பார்ட்டி எல்லாம்

வேண்டாம் என்று மன்றாடினார். முதலாளிக்கு ஆச்சரியம். 'உனக்காகத்தானே இதெல்லாம் செய்கிறார்கள். பெரிய பரிசு எல்லாம் தரப் போகிறார்கள். பிரதானமான விருந்து வேறு உண்டு என்றார்.

எல்லாம் சரி சார்! ஒவ்வொரு பார்ட்டியின்போதும் சேரும் குப்பையை பெருக்கி வாருவதற்குள் தாவு தீர்ந்துவிடுகிறது. வயதாகிவிட்டதால் முடியவில்லை. பெரிய பார்ட்டி என்றாலே மனசு பதைபதைக்கிறது என்றார் அந்தப் பெண்மணி.

பார்க்கும் கண்ணோட்டத்தில் ஒரே விஷயம்
வெவ்வேறு விதமாகத் தெரியலாம்.

# 47. ரசம் - 49

தன்மகன் விளையாட ஆசை ஆசையாய் ஒரு ரயில் பொம்மை வாங்கினார் அந்த விஞ்ஞானி அப்பா. "இது ஃபாரீன் பொம்மை சார்! எல்லா பார்ட்டுக்கும் தனித்தனியாஇருக்கும். வரிசைப்படி பொருத்திட்டு பேட்டரி போட்டால்தான் ரயில் ஓடும். நானே பொருத்திக் குடுத்துடவா?" என்று கேட்டான் கடைக்காரன்.

அவர் மறுத்விட்டார். 'ராக்கெட் ஏவுதளத்தில் வேலை பார்க்கும் விஞ்ஞானி நான். பொம்மை ரயில் எனக்கு ஒரு பொருட்டா?" என்ற நினைப்பு "எப்படி பொருத்தணும்னு உள்ளே படத்தோட குறிப்பு இருக்கு சார்.. பார்த்துக்கோங்க!" என்று பொம்மை இருக்கும் பெட்டியை கொடுத்தான் கடைக்காரன்.

வீட்டுக்கு அவர் பொம்மையோடு வந்ததைப் பார்த்ததும் மகனுக்கு பெருமை தாளவில்லை. தன் விளையாட்டுத் தோழர்கள் எல்லோரையும் கூட்டிவந்து விட்டான். எல்லோர் எதிரிலும் பெட்டியை பிரித்தார் விஞ்ஞானி உள்ளே தனித்தனி பெட்டிகளில் ஏராளமான பாகங்களாக பொம்மை ரயிலைக் கொடுத்திருந்தார்கள். எல்லாவற்றுக்கும் எண்கள் இருந்தன. 'ஒன்றாம் நம்பர் பாகத்தை ஏழின் மீது வைக்கவும். எட்டை எடுத்து கீழே இணைக்கவும்... என்கிற ரீதியில் ஏகப்பட்ட குறிப்புகள். அவருக்ம் படித்து படித்து பொருத்திப் பார்த்தார். ஆனால் ரயில் வடிவத்திலேயே பொம்மை வரவில்லை. குழந்தைகள் அவரை கேலியாகப் பார்த்துவிட்டு விளையாடப் போய்விட்டன.

பக்கத்தில் வீடு கட்டும் வேலையில் இருந்த வயதான தச்சர் தற்செயலாக அங்கு வந்தார். விஞ்ஞானி முழிப்பதைப் பார்த்துவிட்டு அவர் களத்தில்

இறங்கினார். "குறிப்புச் சீட்டு இதோ இருக்கு" என விஞ்ஞானி எடுத்துக் கொடுத்தார். அவர் அதை வாங்கவே இல்லை. பெட்டியின் மீதிருந்த ரயில் படத்தை பார்த்துவிட்டு நிமிடங்களில் அதேபோல பொருத்தி ரயிலை ஓடவிட்டார்.

விஞ்ஞானிக்கு ஆச்சரியம் ... "குறிப்பைக்கூட படிக்காம எப்படி செய்தீங்க?" என்று கேட்டார். முதியவர் பதில் சொன்னார்.. "உண்மையைச் சொல்லணும்னா எனக்கு எழுதப்படிக்க தெரியாது. எப்போ படிக்கத் தெரியலையோ அப்போ மூளை தானாக வேலை செய்ய ஆரம்பிச்சுடும்!"

அனுபவ அறிவை அலட்சியப்படுத்தக் கூடாது.

# 48. ரசம் - 50

மகள் விரும்பியபடி திருமணம் செய்துவைத்த அந்தத் தொழிலதிபர். மறுநாளே தன் மருமகனை தனியா அழைத்தார். "என் மகள் உங்கள் மீது எவ்வளவு அன்பு காட்டுகிறாளோ, அதே அளவுக்கு நானும் உங்களை மதிக்கிறேன். எங்கள் குடும்பம் உங்கள் மீது கொண்டிருக்கும் அன்பின் அடையாளமாக எனது ஒட்டுமொத்த சொத்துக்களில் சரி பாதியை உங்கள் பெயரில் எழுதி வைக்கிறேன் என்றார் தொழிலதிபர்.

"நன்றி மாமா! என்றான் மருமகன்."இந்த சொத்துக்களை இன்னும் பல மடங்கு பெருக்க வேண்டும். எனக்கு வயதாகிவிட்டது. நாள் முழுக்க தொழிற்சாலைக்கும். நகரின் இன்னொரு மூலையில் இருக்கும் ஆபீசுக்கும் என்னால் அலைய முடியவில்லை இன்று முதல் தொழிற்சாலைக்கு உங்களை நிர்வாகியாக

*நியமிக்கிறேன். நீங்கள் அதைப் பார்த்துக் கொள்ளுங்கள். நான் ஆபீஸ் வேலையை கவனிக்கிறேன்.*

*"சாரி மாமா.. எனக்கு தொழிற்சாலையின் சத்தமே பிடிக்காது என்னால் ஒரு நிமிடம்கூட அப்படிப்பட்ட சூழ்நிலையில் இருக்க முடியாது!"*

*ஒகே அப்படியானால் தொழிற்சாலையை நான் கவனிக்கிறேன். நீங்கள் ஆபீஸ் வேலைகளைப் பார்த்துக் கொள்ளுங்கள்."*

*"காலை 10 மணியிலிருந்து சாயங்காலம் ஆறு மணிவரை ஒரு சேரில் உட்கார்ந்து ஏகப்பட்ட ஃபைல்களைப் பார்த்து கையெழுத்து போடுவது ஒரு வேலையா? எனக்கு இப்படி ஆபீஸ் என்கிற கூண்டுக்குள் அடைந்து கிடப்பது பிடிக்கவில்லை மாமா!"*

*தொழிலதிபர் குழம்பினார். "அப்படியானால்*

*நீங்கள் என்ன செய்வதாக உத்தேசம்?" என்று கேட்டார்.*

*மருமகன் தீர்மானமாக சொன்னான். "உங்கள் சொத்துக்ளில் பாதியை எனக்கு தருவதாகச் சொன்னீர்கள் அல்லவா? அப்படி எனக்குத் தரும் சொத்துக்களை திரும்பவும் நீங்களே என்னிடம் பணம் கொடுத்து வாங்கிக் கொள்ளுங்கள். அந்தப் பணத்தை வைத்து நான் சந்தோஷமாக வாழ போகிறேன்!"*

*உழைக்காமல் கிடைக்கும் பொருளின் உன்னதம் பலருக்கு தெரிவதில்லை.*

# 49. ரசம் - 51

அந்த நான்கு நண்பர்களும் வேட்டை பிரியர்கள். நகரை ஒட்டி இருக்கும் மலைக்காடுகளுக்கு எப்போதாவது வேட்டைக்குச் செல்வாகள். காட்டெருமைகளை வேட்டையாடுவது அவர்களுக்கு சாகச உணர்வு தரும் விஷயம். துப்பாக்கி, கத்தி, சக்தி வாய்ந்த டார்ச்டிலைட் என சகல உபகரணங்களோடும் தான் செல்வார்கள். காட்டுக்குள் தங்கி வேட்டையாடும் நாட்களுக்கான சாப்பாடு, தண்ணீர் என சகலமும் கொண்டு போவார்கள். ஒரு வாகனம் அவர்களை காட்டுக்குள் கொண்டு சென்றுவிடும். வேட்டை முடிந்ததும் போனில் தகவல் சொல்லி தங்களை பிக்கப் செய்ய வாகனம் வரைவழைப்பார்கள்.

வழக்கம்போல இம்முறையும் வேட்டை முடிந்ததும் போன் செய்தார்கள். ஒரு மினி வேன்

வந்தது. ஆளுக்கு ஒரு காட்டெருமையை வேட்டையாடி வைத்திருந்ததைப் பார்த்ததும் வேன் டிரைவர் மிரண்டு போனார். "இந்த நான்கையும் வேனில் ஏற் றிக்கொண்டு, நீங்களும் ஏறுவதானால் வண்டியை ஓட்ட முடியாது, அவ்வளவு எடையைஇந்த மினி வேன் தாங்காது. இரண்டு எருமைகளை மட்டும் வேண்டுமானால் ஏற்றுங்கள் ! என்றார்.

ஆனால் நால்வரும் தகராறு செய்தார்கள். "போன வருஷம் இதேமாதிரி நாலு காட்டெருமைகளை உன் வண்டி மாதிரியே இருக்கற வேன்லதான் எடுத்துக்கிட்டு போனாம். எடை தாங்காதுன்னு ஏன் பொய் சொல்றே என்று கத்தினார்கள். போதையில் இருந்தவர்களுடன் பேச்சை வளர்க்க டிரைவர் விரும்பவில்லை. ஏற்றிக்கொண்டார்.

மலையில் செங்குத்தான ஒரு மேட்டில் ஏறும்போது பாரம் தாங்காமல் வேன் கவிழ்ந்தது.

அப்படியே உருண்டு ஒரு பள்ளத்தில் விழுந்தது. ஆழம் அதிகமில்லை என்பதால் யாருக்கும் அடி அதிகமில்லை. தட்டுத் தடுமாறி எழுந்து நின்ற டிரைவருக்கு, அவர்களில் இரண்டு நண்பர்கள் பேசிக் கொள்வது காதில் விழுந்தது.

"வண்டி எங்கேடா விழுந்தது?"

"போன வருஷம் இதே மாதிரி நாலு எருமைகளை ஏத்திக்கிட்டுப் போன வேன் கவிழ்ந்ததே அதே பள்ளத்துலதான்!"

புத்திசாலிகள் மட்டுமே தவறுகளிலிருந்து பாடம் கற்கிறார்கள்

# 50. ரசம் - 52

நூற்றுக்கணக்கானவர்கள் பணியாற்றும் அந்த நிறுவனத்துக்கு புதிய மேனேஜரை நியமிக்க எழுத்துத் தேர்வு நடந்தது. சிக்கலான பிரச்னைகளுக்கு துரிதமாக முடி வெடுக்கு திறமையும் மனிதாபிமானமும்தான் தனது மேனேஜருக்கு தேவை என்று நினைத்தார் நிறுவனத்தின் முதலாளி. அரே ஒரு கேள்விக்கு பதில் எழுத வேண்டும்.

கேள்வி இதுதான்|

“இடியும் மின்னலுமாக மழை கொட்டும் ஒரு இரவில் நீங்கள் காரில் போகிறீர்கள். மோசமான சாலை. எப்போதாவதுதான் அந்த ரோட்டில் பஸ் வரும். இந்த மழை நேரத்தில எப்படி இருக்கும் என்று சொல்லமுடியாது. வழியில் ஒரு பேருந்து நிறுத்தத்தில்

*3 பேர் பஸ்சுக்காக காத்திருக்கிறார்கள். உடல்நிலை சரியின்றி, மரணத்தை எதிர்நோக்கிய நிலையில் ஒரு பாட்டி, சின்ன வயசில் ஒரு விபத்தில் சிக்கியபோது சிகிச்சை அளித்து உங்கள் உயிரைக் காப்பாற்றிய டாக்டர், உங்கள் உயிர்க்காதலி. காரில் யாராவத ஒருத்தரைத்தான் ஏற்றிக்கொள்ள முடியும். மூன்று பேரில் யாருக்கு இடம் தருவீர்கள்?*

*அந்த பாட்டியை உடனே மருத்துவமனைக்குக் கூட்டிப் போகவில்லை என்றால் அடுத்த சில மணி நேரங்களில் அவர் இறந்து போக நேரிடலாம். காலம் முழுக்க உங்கள் மனசாட்சி உறுத்தும். அல்லது அந்த டாக்டரை காரில் ஏற்றிக்கொள்ளலாம். அவருக்கு உதவி செய்வதற்கு இதைவிட சிறந்த சந்தர்ப்பம் அமையாது. ஆனாலும் உங்கள் உயிர்க் காதலியை எப்படி புறக்கணிக்க முடியும்? அவரைத் தவிக்க விட்டுவிட்டு போனால் உங்கள் வாழ்க்கையே அப்புறம்*

இருண்டுவிடாதா?

என்ன செய்வீர்கள்?”வந்திருந்த 500பேரில் ஒருவரை சந்தோஷமாக மேனேஜர் பதவிக்கு நியமித்தார் முதலாளி. அவர் எழுதியிருந்து பதில் ... கார் சாவியை டாக்டரிடம் கொடுத்து அந்தப் பாட்டியை அழைத்துக்கொண்டு மருத்துவமனைக்கு போகச் சொல்வேன். நான் இறங்கி என் காதலியோடு பஸ்சுக்காக காத்திருப்பேன்“.

பிராக்டிகலாக யோசிப்பவர்களே ஜெயிக்கிறார்கள்.

# 51. ரசம் - 53

பள்ளியில் பெற்றோர் - ஆசிரியர் சந்திப்புக்கு அவரை வரச் சொல்லியிருந்தார்கள். பள்ளியில் படிக்கும் தனது குட்டிப்பெண்ணோடு அவர் காலையில் சீக்கிரமாகவே போய்விட்டார். வியப்பும் ஆச்சரியமும் கலந்த பார்வையோடு அவரை எதிர்கொண்டார், மகளின் வகுப்பு ஆசிரியை.

’உங்க பெண்ணோட படிப்பைப் பற்றி குறை சொல்றதுக்கு எதுவுமில்லை. நல்ல ரேங் எடுக்கறா... நல்லா படிக்கறா... கிரவுண்டுக்குப் போனா மத்த குழந்தைகளோட சேர்ந்துக்கிட்டு ஜாலியாக விளையாடறா .. எனக்கு மட்டுமில்லை, எல்லா டீச்சர்களுக்கும் அவளை ரொம்பப் பிடிச்சிருக்கு.. என்று பாராட்டு மழை பொழிந்த ஆசிரியை அதன்பிறகு குறைகளைப் பட்டியலிட ஆரம்பித்தார்.

“ஆனா பல சமயங்கள்ல அவளோட கவனம் இங்க இல்லையோன்னு தோணுது. நான் ஒரு ஹோம் ஒர்க் கொடுத்தா, அவ வேற ஏதோ ஒரு ஹோம் ஒர்க்கை செய்துட்டு வர்றா. அவளெப்பவுமே இப்படிச் செய்யறதா மத்த டீச்சர்களும் சொல்றாங்க. அவ இடத்தை விட்டுட்டு வேற எங்கயாவது போய் உக்கார்ந்துக்கறா, ஏன் அங்கே போயிட்டேன்னு கேட்டபிறகுதான், ஸாரிமிஸ் .. ஏதோ ஞாபகத்துல உக்கார்ந்துட்டேன்னு சொல்லி எழுந்திருக்கறா... வீட்டுலயும் இப்படித்தான் ஞாபகமறதியா எல்லாத்தையும் செய்யாறளா..” என்று கேட்டார் ஆசிரியை.

எனக்கு சரியா ஞாபகம் இல்லையே ... ஒரு வேலை அவளோட அம்மாவுக்கு தெரிஞ்சிக்கலாம். அவகிட்ட இருந்து எல்லா மோசமான பழக்கத்தையும் இவ கத்து வ ச்சிருக்கறா, இந்த ஞாபக மறதி கூட இவ அம்மாகிட்ட இருந்து இவளுக்குத் தொற் றியிருக்கலாம், ஆனா இவ

நல்லா படிக்கிறாள்னு சொன்னீங்களே அது மட்டும் என்னை மாதிரி என்று பெருமையடித்துக் கொண்டார் அவர்.

ஆசிரியை இப்போது அவரை ஏற இறங்கப் பார்த்துவிட்டுக் கேட்டார். “எல்லாம் சரி ! உங்களை பெற்றோர் ஆசிரியர் சந்திப்புக்கு நாளைக்குத் தானே வரச் சொன்னோம் .. இன்னைக்கே ஏன் வந்தீங்க?”

மகளுக்கு ஞாபகமறதி பழக்கத்தை யார் கொடுத்தது என்பது இப்போது அவருக்கு புரிந்தது.

அடுத்தவரை பழி சொல்லும்முன் நம் முதுகை பார்க்க வேண்டும்.

## 52. ரசம் - 54

*கல்யாணமமன் புதுமண தம்பதியினர் இருவர் மலைப்பாதையில் ஹனிமூனுக்காக பஸ்ஸில் சென்றனர். ஏகப்பட்ட ஹேர்பின் பெண்டுகள். மகிழ்ச்சியாக குதூகலமாக பயணப்பட்டனர். இயற்கைக்காட்சிகளை ரசித்தபடியே ஒருவரை ஒருவர் தொட்டும், அடித்தும் விளையாடிக் கொண்ட பயணித்தனர். மலை நகரை நெருங்கியதும் ஹோட்டல் வர இறங்கினர். இவர்கள் இறங்கியபின் கிளம்பிய அந்த பஸ் மீது 10 செகண்டில் ஒரு பெரிய பாறை மலை மேல் இருந்து வந்து விழ விபத்துக்குள்ளானது. எல்லோருக்கும் அடிபட்டது.*

*மனைவியிடம் கணவன் சொன்னான் நல்லவேளை நாம் தப்பித்தோம். ஆனால் மனைவியோ கணவனிடம் ஒரு 10 செகண்ட் பஸ் லேட்டா கிளம்பியிருந்தா*

நல்லாயிருக்குமே யாருக்குமே அடிபட்டிருக்காது என்று சொன்னாள். கணவன் மனதி ற்குள் மனைவியின் நல்ல மனதை வாழ்த்தியபோதும் தன்னை நொந்து கொண்டான்.

*மற்றவர் நிலையில் தன்னை வைத்து பார்க்கும் உணர்வு மற்றவரிடம் நம் மதிப்பை கூட்டும்.*

## ஆசிரியரைப்பற்றி...


*பெயர் : JFM.R.. R.கணேசன் (RRG)*

*பணி : முதுகலை ஆசிரியர் (ஆங்கிலம்)*

*அரசு மேனிலைப்பள்ளி, திருக்கோகர்ணம், புதுக்கோட்டை*

*படிப்பு : B.Sc., (Maths) B.Ed., M.A., (Eng) M.Phil நுபே)*

பகுதி நேர செயல்பாடு : *JCI Prime Trainer,*

*JCI University USA*

*SFA Trainer, Lions International,*

*Coach, Nikhil Foundation, Madurai*

*Faculty, CED, Pudukkottai*

*Visiting Faculty : Win Win - Madurai Dee Jee Groomers, Theni Wide Angle, Sivakasi, Idea Plus, Chennai*

*Palms, Tuticorin*

உறுப்பினர் : *JCI* புதுக்கோட்டை சங்கமம்

மாநில பொதுக்குழு உறுப்பினர் : தமிழ்நாடு பதவி உயர்வு பெற்ற முதுநிலை

பட்டதாரி ஆசிரியர் கழகம்.

## இதுவரை எழுதி வெளிவந்த கையேடுகள்

1. *2001* - "நம்மை நாமே சீரமைப்போம் - புதுக்கோட்டை சென்ட்ரல் ஜீனியர் சேம்பர் - *JFM.M.*சொக்கலிங்கம்

2. *2001* - "முதற்செயலை முந்திச் செய்வோம்"- புதுக்கோட்டை சங்கமம் ஜீனியர் சேம்பர் *JC. N.*சோமசுந்தரம்

3. *2001* - "முரண்பாடுகளை முறியடிப்போம்" - சங்கரன் கோவில் கோமதி ஜீனியர் சேம்பர் *JFM.S.S.*ஜெகநாதராஜா.

4. *2004* - "பேரம் பேணுவோம்" - புதுக்கோட்டை சங்கமம் ஜேஸிஸ் *Jc.Adv.K.*செல்வகுமார்

5. *2004* - "அமைதியை அரவணைப்போம்" - புதுக்கோட்டை சங்கமம் ஜேஸிஸ்

*Jc.Adv.K.செல்வகுமார்*

6. *2005 - "ஆனந்தம்" - JCI. அறந்தாங்கி சென்ட்ரல் - Jc. A. சுரேஷ்குமார்*
7. *2006 - "கூல் பிளீஸ்" JCI. புதுக்கோட்டை சங்கமம் - Jc. K.நல்லதம்பி*
8. *2008 - "வெற்றிக்கு எல்லை இல்லை" JCI. புதுக்கோட்டை சங்கமம் -JC.Rm.துரை மணி*
9. *2009 - "மனத்தக்காளிரசம்" - JCI. புதுக்கோட்டை சென்ட்ரல் - JC Oxford A.சுரேஷ்*
10. *2010 - "அணி அமைப்பு ஒரு கலை" JCI. புதுக்கோட்டை சங்கமம் JC.D.தாமஸ் எட்வர்டு*
11. *2010 - "நேரம் நல்ல நேரம்" JCI. திண்டுக்கல் வின்னர்ஸ் JC.T.அழகர்சாமி*

12. 2011 - "உன்னதம்" JCI. புதுக்கோட்டை சங்கமம் JC. மணிமேகலை நல்லதம்பி

13. 2012 - ஈகோ சாதகமா? பாதகமா? JCI சிவகாசி JCI.PPP.A.ஜயெராம்

பொழுது போக்கு : படிப்பது, படைப்பது, பயணிப்பது மற்றும் பயிற்சியளிப்பது

குழந்தைகள் : G.P. ஜனனி G.P. அஜாய்

இல்லத்தரசி : திருமதி G.P. பட்டு ஸ்ரீ தேவி

## நூல் பற்றிய விமர்சனங்களுக்கு

JFM.R.R.கணேசேன் 612,
பெரியார் நகர்,

இராஜகோபாலபுரம் ஹவுசிங்யூனிட்,

புதுக்கோட்டை - *622 003*

அலைபேசி - *94438 27035, 9080709055*

மின்னஞ்சல் - *jcrrgprime@gmail.com, gunsun82@gmail.com*

முகநூல் - *Rrg ganesan, Ganesan Rrg*